4/11/51 M.V.M BANGALORE 2




வாள் 5 வீச்சு 9

3-11-51 சனிக்கிழமை

ஆசிரியர்கள்:
காஞ்சி. மணிமொழியார்
நா. இளஞ்செழியன் B.A.Hons

துணை ஆசிரியர்:
காஞ்சி. கல்யாணசுந்தரம்

விலை 2 அணு

# திராவிடத்தின் அன்பழைப்பு

(ப. புகழேந்தி)

அழைப்பு! அதிலும் அன்பழைப்பு! விருந்துக்கல்ல! விருதாக்களின் கொட்டத்தை அடக்க! கேளிக்கையல்ல—நம்மைக் கேலிச் சித்திரமாக்கும் கெடுமதியாளரின் பிடியிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ள!

மாவீரர்கள் நாம் என்பதை மண்டலத்திற்கு மகிழ்ச்சியுடன் கூறிட, அஞ்சாநெஞ்சினர் நாம் என்பதை அவனிக்கு அறிவித்திட, வேலும் வில்லும் நம் விளையாட்டுப் பொருள்கள் என்பதை விணர் அறிந்து நம்மைவிட்டு விலகிட, செந்தமிழர் அனைவரும் செங்குட்டுவர் என்பதைச் சிறப்பித்துக்கூறிச் செயலில் காட்டிட,

'அவசியமான பிரச்னைகளுக்கும் அழைத்ததும்பின்னரே கூடும் ஆர்வ நிலையி ல நாம் உள்ளோம்' என்ற ஆண்மைக் குரலோடு 'வீழ்ந்தது போதும் இனி வாழ்வோம்—அழிந்தது போதும் இனி நாமே ஆள்வோம்' எனும் இலட்சியப் பண் இசைத்து, அதனால் ஏற்படும் அடக்குமுறை அம்புகளை ஆர்வத்தோடு அணைத்து புதிய பாதை புகுந்திட அழைப்பு!!

'புலியை எதிர்த்தவன் பூனையைக் கண்டு விலகுவதா? வேலுக்குப் பணியாதவன் வெறும் பஞ்சாங்கத்திற்கு வேலையாளாவதா? சமரிலே வென்றவன் வெறும் சாத்திரக் குப்பைகளுக்கு அடிமையாவதா? புயல்போலப் பகைவரைப் பாய்ந்தவன் பூணூலுக்குப் பூசை செய்வதா? வளமை மிக்க கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டவன் வர்ணாஸ்ரம வரட்டுக் கூச்சலுக்கு அடிபணிவதா? போரில் முதல்வன் பூசுரரின் தாசனா?' எனும் எழுச்சிக் குரலை இயக்கி எத்தர்கள் ஆட்சியை ஒழித்து 'இன்பத் திராவிடமே எமது இலட்சியம்' எனும் இதய ஒலியை முழக்கி, மாபெருஞ் சிறைத் தண்டனை பரிசாகக் கிடைத்தாலும் 'மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை நம்மை மாட்ட நினைக்கும் சிறைச் சாலை' என மகிழ்ந்து பணியாற்றிட,

'கடாரம் வென்றவன், கலிங்க களத்தில் பல்லரை வீறுடன் கொன்றவன், கடல்மேற் சென்றவன்' என்றெல்லாம் புகழப் பட்டவன் 'கஞ்சி குடிப்பதற்கின்றி அதன் காரணங்கள் யாதென அறியும் அறிவுமின்றி பஞ்சமோ பஞ்சம்' எனப் பரிதவித்திடும் 'பரிதாபகரமான நிலைமைமாற்றி 'சுமமரியாதை வாழ்வே' சுகவாழ்வு' எனும் சுதந்திர முழக்கத்தைக் கிளப்பி பகுத்தறிவாளர் படையின் முன்னணியில் நின்றிட.

'ஆராய்ந்திடாதே அது ஆண்டவனுக்கிழைத்திடும் அநீதி' என்ற அறிவற்றவர் போக்கை மாற்றி, 'அன்பும் அறிவும் ஆற்றலுமே ஆண்டவன்' என்ற அருமை மிக்க கருத்துக்களை அவனியோருக்கு அறிவித்திட,

வாணிபத்தை வடநாட்டாரிடமும், சமுதாயத்தை சாஸ்திரமேற்றிடமும், அரசியலை 'அவா' மேற்பார்வையிலும் அடகு வைத்துவிட்டு 'காயமே இது பொய்யடா காற்றடைத்த பையடா! அவனன்றி ஓரணுவும் அசையாது' என்ற கருத்தற்ற முறையில் காலம் கழித்து 'உலக இனங்களிலே நம் இனத்திற்கு உயர்ந்த இடமுண்டு. ஆனால் உலக முன்னேற்றத்தில் நாம் ஒரு உதவாக்கரை—இந்த மாசினைத் துடைக்க—மாநிலத்தின் முதல்வர்களாக—மகிழ்ச்சியோடு போட்டியிட்டு வாருங்கள்!' என்று அறிவுறுத்திடும் இன்ப அழைப்பு இந்த அன்பழைப்பு.

அழைப்பவர் அசடேன் கூட்டத்தவரல்ல; ஆற்றலரசர், அஞ்சா நெஞ்சர், அறிவுலகச் சிற்பி, 'ஆரிய மாயை'யை அளித்து அதனால் ஆளவந்தாரின் அடக்குமுறைக்கு ஆளானவர். அவனியோர் அறிந்திருப்பர் அவர்தான் அறிஞரேறு அண்ணாதுரை என்று.

அவரும் அவருக்குப் பின்னே அணிவகுத்து நிற்பவர்களும் 'இந்நாட்டைப் பொன்னாடாக்குவோம்' எனச் சபதமேற்றவர்கள்.

இந்தி இந்நாட்டில் நுழைந்த போது 'எப்பக்கம் வந்து புகுந்துவிடும் இந்தி எத்தனை பட்டாளம் கூட்டி வரும்' எனக் கனன்றெழும்

காலிகளாகக் களத்தினுள் புகுந்தவர்கள்.

தீந்தமிழில் தேனூறும் சொற்களையும், எழுத்துகளையும் திராவிடத்திற்குத் தந்தவர்கள். பகுத்தறிவுப் பாடம் புகட்டி அறிவு வளர்ச்சிக்கு வழி வகுத்து மறுமலர்ச்சியின் மணம் மாநிலத்தில் கமழ வேண்டுமென்ற மனது படைத்தவர்கள். மொழியிலே தனி நடை கண்ட தன்னேரில்லாத் தமிழர்கள்.

மதுரை—அவர்கள் மனதை மாற்றிவிடவில்லை.

குடந்தை—அவர்களைக் கோழைகளாக்கி விடவில்லை.

தேனி—கூட அவர்களைத் திகைக்கவைத்து விடவில்லை.

பேச்சுரிமை அவர் தம் மூச்சு. எழுத்துரிமை அவர்தம் இதயகீதம். இதனைக் குன்றத்தூர் எட்டு முறை வெடித்த துப்பாக்கி வெடிகளால் உணர்த்திற்று. நாரணமங்கலம் 'நாங்கள் உரிமையை விட்டுக்கொடோம்' என்பதைக்காட்டிற்று. வடார்க்காடு மாவட்டம் தடை செய்யப்பட்ட 'ஆரியமாயை'யை வாசிப்பதன் மூலம் அவர் தம் எழுத்துரிமைப் போருக்கு வாகை சூடியது,

இலட்சியக்கோட்டையைநோக்கி அவர்கள் நடந்தபோது ஏற்பட்ட இன்னல்கள் எண்ணற்றவை. நாவலர் நெடுஞ்செழியன் ... [illegible]

முத்து நடராசன்களைத் தரவேண்டியதிருந்தது. பன்னீர்செல்வன்களைப் பறிகொடுக்க வேண்டியிருந்தது. உடையார் பாளையம் வேலாயுதத்தின் உயிரையே போக்கிவிட்டனர் 'கலிபுகராமன்'களும் அவர் தம் அடிவருடிகளான 'விபீஷணர்'களும். எல்லாவற்றிற்கும் மேலாக செருக்கில் பலரின் இதயங்கவர் கள்வன், அஞ்சா நெஞ்சன் அழகிரிசாமியை சாவு தன் கொடுமைக் கரங்களால் தழுவிக் கொண்டது.

கருஞ்சட்டைப் படைக்குத் தடை.

சீர்காழியில், குன்றத்தூரில், திருவாரூரில், தஞ்சாவூரில் எங்கும் 144.

அண்ணா எழுதிய 'ஆரிய மாயை' வழக்கு. ஆறு மாதம் சிறை.

திராவிடர் கிளை—அச்சகத்திற்கு ஆயிரம் ரூபாய்.

விடுதலைப் போர், இலட்சிய வரலாறு வழக்கு; பின்னர் விடுதலை.

காந்தியார் சாந்தியடைய!—வழக்கு. எந்த நாட்டிலும் இல்லாத புதிய தண்டனை; ஆசைத்தம்பியையும் அவர்தம் தோழர்களையும் மொட்டையடித்தது.

'இராவண காவியத்தைப் படிக்காதே!

'தூக்கு மேடை'யை நடிக்காதே!'

'போர்வாளா' போடு தடையை!'

'அழியட்டுமே திராவிடம்!—அதன் ஆசிரியரைப் பிடி. மாண்டு போனரா...? அப்படிஞல் பரமண்டலத்திற்கு 'போன்' பண்ணு.

'கோட்சேக்கூட்டமா' எழுதிஞய் கொண்டுவா இங்கே!'

'உடுமலைப் பேட்டை'யா கோர்ட்டுக்கு வா!

'கிளர்ச்சி'யா நிறுத்து!

'திராவிடநாடா' மூவாயிரம் ரூபாய் தா......'

'விடுதலை'யாஞல் பத்தாயிரம்...'

'இப்போதென்ன....'சவுக்கடியா?'—இரண்டு மாதம்...ஓடு...'

இப்படி ஏராளமான வகைகளில் 'அகிம்சா வாதிகள் ஆட்சி' தன் அடக்குமுறைப் பேயாட்டத்தை அவிழ்த்துவிட வாரம்பித்தது. எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு இன்முகத்துடன் 'எதையும்தாங்கும் இதயம் உண்டு' என்ற எண்ணத்துடன் எங்கோ தெரியும் இலட்சியக் கோட்டையை நோக்கி நடந்து கொண்டிருக்கிருர்கள் அவர்கள்.

மக்கள் ஆதரவு மழை யெனப் பொழிய ஆரம்பித்தது. அறிவுப் புயல் வீசிப் பின்னர் ஆதரவுத் தென்றல் அவர்களை அணைக்கவாரம்பித்தது. அவர்கள் இத்தனை நாட்களும் பட்ட துன்பங்களுக்கு விடிவு ஏற்படும் நாள் வெகு தூரம் இல்லை என்பதைப் பல நிகழ்ச்சிகள் தெரிவிக்கின்றன.

அறிஞர் அண்ணா கேட்கிருர்: 'நயவஞ்சக நரிக்கு ஒரு புதர் இருக்கிறது. பாம்புக்கும் ஒரு புற்று இருக்கிறது. புலிக்கும் ஒரு குகை இருக்கிறது. அங்ஙன மிருக்க, ஐந்து கோடி திராவிடராகிய நமக்கு நாம் வாழ ஒரு தாயகம், திராவிடம் இருக்க வேண்டாமா?' என்று.

ஆம்...உண்மை! முல்லைக்கு முறுவல்செய்யும் தன்மை, மல்லிகைக்கு மணக்கும் வகை, காவியத்திற்கு சுவைதரும் திறம், கரும்பிற்கு இனிக்கும் சுவை எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் திராவிடருக்குத் தனியாட்சி.

அந்த ஆட்சியைப் பெறுவதற்கான அழைப்பு அறிஞர் அண்ணாவிடமிருந்து, ஆற்றலரசரிடமிருந்து வருகிறது. அவர்தம் தோழர்களிடமிருந்து வருகிறது. திராவிடத்தில் வாழ்பவர்களில் நாம் ஒருவர், என்ருல் அவர்கள் தொகையில் நாமும் ஒரு அங்கமாக வேண்டும். எனவே அழைப்புப் பெற்ற அருமைத் தோழர்களே!

காட்டிக் கொடுக்கும் தன்மை வாய்ந்த விபீஷணர்கள் விலகி நிற்கட்டும் வேண்டுமாஞல்.

உரிமையை விட உண்டுகளித்து வாழ்தலே உயர்ந்தது என்றிடும் உன்மத்தர்கள் ஒதுங்கி நிற்கட்டும்.

'ஆரியர் கூட்டத்திற்கு நானோர் அடிவருடி' என்றிடுவோர் வேண்டுமாஞல் அப்பால்நிற்கட்டும் அவசியமில்லை.

தீந்தமிழ் வீரர்களே! தீரத் திராவிடர்களே! நீங்கள் வாருங்கள் உங்கள் தொண்டினை இம்மண்டலத்திற்குச் செய்திட, திராவிடத்திற்குத் தனியரசு பெற்றுத்த, வாழ் விழந்த திராவிடத்தை வளமார் திராவிடமாக்க வாருங்கள் என உங்களை அழைக்கிருேம்.

டிஸம்பர் 14, 15, 16, 17 தேதிகளில் உங்கள் உறுதி மொழியைப் பெற—ஞூறவை ஏற்க, ஆதரவின் அளவினை அறிந்து திட்டம் தீட்ட சென்னை திராவிட முன்னேற்றக் கழக மாநில மாநாடு உங்களை அழைக்கிறது. சென்னைக்குத் திரண்டுவாரீர் இலட்சக் கணக்கில் என திராவிடப் பெருங்குடி மக்கள் அனைவருக்கும் அழைப்பு விடுகிருேம்.

---

## "போர்வாள்" சந்தா விவரம்

★

| | |
|---|---|
| ஓராண்டு | ரூ. 6 8 0 |
| 6 மாதம் | ரூ. 3 4 0 |

போர்வாள் அலுவலகம்
பவழக்காரத் தெரு,
சென்னை 1.



கட்டுரை

# திபேத்

[தங்கவேலர்]

நாகரீகமே புரியாத நாடு—அதிலும் குருட்டு நம்பிக்கை வேறு அந்த நாட்டுப் போக்கிலே புகுந்து விட்டால் எந்த ஒரு நாடுமே காடாகத்தான் காட்சி தரும்! அங்கே உலவுகிற மக்களினம்—பரிதாபத்தின் சின்னமாகத்தான் கருதப்படும்! எண்ணத்தையும், எழுச்சியையும் எங்கெங்கோ கண் காணு இடங்களுக்கெல்லாம் விரட்டியடித்து புதுப்புது கண்டுபிடிப்புகளைச் செய்து வாழும் நாட்டை சுவர்க்க வாயிலாக ஆக்கிக் கொண்டிருக்கும் ஆற்றலரசர்களும், விஞ்ஞான விடிவெள்ளிகளும் உலவுகிற புத்துலகத்தின் முன்னே, பழமை பேசி குருட்டு மண்டபத்திலே நுழைந்து செல்லும் நாகரீகம் புரியாத நாடும், அந்த நாட்டு மக்களும் நடைப்பிணங்கள் தான்! புதுமையை விரும்பியவன் முன்னேற்றப் பாதையில் எவ்வளவோ தூரம் அடி எடுத்து வைத்து பயணம் செய்தவிட்ட பிறகும்-பழமைப் பைத்தியங்கள் மூக்கிலே விரலை வைத்து ஆச்சரியப்படும் நிலை தான் நாட்டிலே வளர்ந்து கொண்டிருந்தது. புதுமையாளர்களின் பக்கம் வேகவேகமாக இல்லாவிட்டாலும் அடிமேல் அடிவைத்து நகர்ந்து அவர்களைப் பின் தொடர்ந்திருந்தாலாவது......இன்றைய உலகிலே ஏற்பட்டிருக்கக் கூடிய இவ்வளவு பெரிய வேற்றுமை பழமைக்கும் - புதுமைக்குமிடையே ஏற்பட்டிருக்காது என்பதோடு பழமை ஒழிக்கப்பட வேண்டிய சின்னமென்பதை உலகினர் முழுவதும ஒப்ப வேண்டிய நிலை ஏற்படும்!

பழமை—நாட்டுப் போக்கிலே பெரும்பாலும் வளர்த்தவர்கள் சூது எண்ணங்கொண்ட சுயநலமிகள்தான்! அவர்களின் ஏமாற்றுத் தனத்துக்கு மக்களினம் அடிமைப் பட்டிருந்தால்தான் இயலுமென்பதை அவர்கள் மிக நன்ருகப் புரிந்து வைத்திருந்தார்கள்! மக்களினம் அடிமைப் படவேண்டுமாஞல்....கூட்டாக அந்தச் செயலை ஒரே நேரத்தில் முடித்துவைக்க ஆட்சிபீடத்தின் துணை—தேவைப்படும் ஒன்று என்பதையும் சூழ்ச்சிக்காரர்கள் அறிந்திருந்தார்கள்!

எனவே, ஆட்சியைக் கைப்பற்றியோ, அல்லது ஆட்சியாளரின் ஆதரவைக் கொண்டோ சூழ்ச்சித் திட்டத்தை விரித்தால் மக்கள் அவர்களின் ஆசை வலையில் விழுவது நிச்சயம் என்பதோடு என்றென்றும் மக்களினம் மீள முடியாத நிலை ஏற்படவும் வழி வகுத்து விடுகிருர்கள்!

சுயநலவாதிகளின் இம்மாதிரியான சூழ்ச்சித் திட்டங்களிஞல், நிலைபிழந்து போன நாடுகள் எத்தனை எத்தனையோ! ரோஜா மலரும் பருவத்திலே இரும்புக் கரத்தால் கசக்கப் படுவதுபோல, மலர்ச்சிப் பாதையிலே அரும்புவிட்டுப் புதுமலராகப் பொழியவேண்டிய நாடு, சந்தர்ப்பங்களையெல்லாம் நாசமாக்கிக் கொண்டு எத்தனையோ நாடுகள் சரிந்து வீழ்ந்திருக்கின்றன—அந்த சூழ்ச்சிக்காரர்களின் ஒரேசூதுத் திட்டத்தால் மட்டும்! புதுமை மாடி ஏறி உலவ இருந்த நூற்றுக் கணக்கான நாடுகள், புதுமை மாடியின் படிகளிலே கால் வைத்து ஏறிக் கொண்டிருந்த நேரத்திலே அதன் காலைப் பிடித்திழுத்து விட்டனர் ஏமாற்றுத் தனத்தையே கலையாகக் கொண்ட பழமைப் போக்கினர்! அவர்களின் தீச் செயலால் வீழ்ந்துவிட்டு, பின் ஓடோடி மாடி ஏற எத்தனை எத்தனை ஆண்டுகளோ கழிந்தன! புதுமை மாடி ஏறுவோரைக் கரம்பிடித்துப் பழமை வாதிகள் இழுத்து விட்டுக் கொண்டேதானிருந்தனரென்ருலும், சரிந்து, சரிந்து வீழ்ந்து கொண்டேயிருந்த நாடுகள் சரிந்த நிலையிலேயே இருந்து விடவில்லை. மேலும், மேலும் முயன்று முயன்று மாடி ஏறி, புதுமைத் தென்றலின் இனிமையை மாடியின் உச்சியிலே அனுபவித்துக் கொண்டுதான் வருகின்றனர்!

..........அந்த நாடுகள் வரிசையிலே—இடம் பெறும் ஒரு நாடு தான் திபேத்! எத்தனை எத்தனையோ பழமைவாதிகள் திபேத்திலே உலவி ஆளுக்கொருமுறையாக, ஆண்டுக்கொரு முறையாக பழமைப் பாசாங்கள் இயற்றி.........மேலும் மேலும் திபேத்திய மக்களை தொல்லை நிலைக்கு இழுத்துவிட்டு வந்தனர்! அந்த நாடு சரிந்து சரிந்து எழுந்த நிலை.........சரிதத்திலே காணக் கிடக்கிறது! திபேத்திய சரித்திரத்தைப் படிக்கும் யாரும் மிகத் தெளிவாக உணர முடியும்..........எவ்வளவோ பெரிய கோர பழமைத் தாக்குதலுக்கு ஆளான நாடு அது என்பதை!

(6-ம் பக்கம் பார்க்க)

# ஆட்சியும்—மாட்சியும்

[இரா. வெற்றிவேல்]

ஒரு நாட்டு மக்களின் வாழ்வு அந்நாட்டு ஆட்சியைப் பொறுத்திருக்கிறது. மக்களின் வாழ்விலே ஏற்றத்தாழ்வுகள் இருக்குமானால் அவர்களிடத்தில் அமைதி சற்றும் காண இயலாது. ஒரு சிலர் எல்லாமும் அனுபவிக்கவும் ஒரு சிலர் ஏங்கி நிற்கவுமான நிலை நாட்டில் இருந்தால் ஆகாது. இத்தகைய மேடு பள்ளங்கள் வாழ்க்கையில் நிரந்தரமாக இருப்பின் அந்நாட்டில் போரும் பிணக்கும் தான் காட்சியளிக்கும்.

உழைப்பும் ஊதியமும் எல்லோருக்கும் ஏற்றவகையில் அமைந்திருக்க வேண்டும். ஒரு சிலர் உழைக்காமலேயே உல்லாச வாழ்வு வாழவும் மிகப்பலர் உழைத்தும் உயிர்வாழ முடியாத நிலையில் வாடவுமான முறை நாட்டிலே இருக்கக்கூடாது. ஆனால் இன்று நாடெங்கும் இம்முறைதான் காணப்படுகிறது. இத்தகைய நிலையினை மாற்றி உழைப்பவன் வாழ்வில் உயரும் வகையிலே சமுதாயத்தை அமைக்க வேண்டிய பொறுப்பு நாட்டு மக்களின் நல்வாழ்வில் நாட்டமுடைய நாடாள்வோரிடத்தில் அமைந்திருக்க வேண்டும். ஆனால் இத்தகைய எண்ணம் இன்றைய நாட்டு ஆட்சியாளரிடத்தில் எழவேயில்லை.

உழு தொழில் செய்து உலகிற்கு உணவளிக்கும் உழவர் கூட்டம் இன்று தாங்கள் உண்ண உணவின்றி பட்டினிக் குரலெழுப்பும் பரிதாபக் காட்சியும், மக்களின் மானத்தைக் காப்பாற்ற தாங்கள் உழைப்பால் உலகிற்கு ஆடை நெய்து அளித்து வந்த நெசவாளர் கூட்டம் இன்று தங்கள் மானத்தைக் காப்பாற்ற ஒரு முழத்துண்டு கூட இல்லாது கையது கொண்டு மெய்யது பொத்தி வேலை கிடைக்காத வேதனையோடு நீர் கசியும் கண்களுடன் வீதியிலே நிற்கின்ற நெஞ்சுருக்கும் காட்சியும், ஏழடுக்கு மாளிகைகளை எழிலுற அமைத்துத் தரும் தொழிலாளர் கூட்டம் தங்களுக்கு ஒண்ட ஓர் ஓட்டைக் குடிசையுமின்றி மரத்தடியிலே வசிக்கின்ற மனமொடிக்கும் காட்சியும், படித்துப் பயனடையும் பக்குவ வயதுடைய பாலர்கள் தங்கள் பாழும் பசிக்கொடுமை தீர்க்க பகலெல்லாம் பாடுபடும் பதைபதைக்கும் காட்சியும், உழைக்கும் பழம் பெருங்குடி மக்கள் உயர் சாதி மக்களால் ஊரின் கடைக் கோடியில் ஒதுக்கப்பட்டு வாழ்வில் முன்னேறாது தடுக்கப்பட்டு, தீண்டும் உரிமை கூட இல்லாது விலங்கினும் கேடாக மதிக்கும் வேதனைக் காட்சியும், இன்று இந்நாட்டிலன்றி வேறு எந்நாட்டில் காண இயலும்? இத்தகைய அவல நிலையினைப் பார்த்துக் கொண்டு வாளாவிருக்கும் ஒரு ஆட்சியினை நல்லதொரு ஆட்சியென்று நாட்டு மக்களால் நவிலத்தான் முடியுமா? சமூக பொருளாதார விடுதலை இல்லையேல் வெறும் அரசியல் விடுதலையினால் மட்டும் மக்களுக்கு நன்மைகள் கிட்டிவிடாது.

உணவு, உடைபோன்ற மக்களது இன்றியமையாத அன்றாட பிரச்சினைகளைத் தீர்த்து வைக்க ஆட்சியாளர்மனம் இல்லையென்று பல்லவி பாடுகின்றனர். பணம் இல்லை என்று கூறிவிட்ட மாத்திரத்தில் மக்களது தொல்லைகள் தீர்ந்துவிடுமா? இன்றைய நாட்டின் எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்யும் அளவிற்கு செல்வங்கள் இங்கே இருக்கின்றன. இருக்கும் இடங்களை ஆட்சியாளர் அறிந்திருந்தும் அவற்றை அடைவதற்கு இன்றைய ஆட்சியாளரிடத்தில் எண்ணத்துணிவு ஒன்று மட்டும் இல்லை. இந்த நாட்டு மூலதனங்கள் யாவும் ஒரு சில மாளிகைகளிலும் மடங்களிலும், கோயில்களிலும் முடக்கப் பட்டிருக்கின்றன. ஆட்சி செலுத்துவோரின் அடக்குமுறைக்கும் ஆதிக்கம் செலுத்துவோரின் அதட்டலுக்கும் மதவாதிகளின் மருட்டலுக்கும், கோயில் பெருச்சாளிகளின் கொக்கரிப்புக்கும் அஞ்சி இந்த நாட்டுச் செல்வங்கள் அனைத்தையும் சுகவாசிகள் சூரையாடிக் கொண்டுபோக இடந்தந்து கொண்டிருகின்றனர் இன்றைய ஆட்சியாளர்கள்.

ஜமீனை சாய்த்து விட்டோம் என்று பெருமை அடித்துக்கொள்ளும் அரசியலார் இனம்கள் விஷயத்தில் மட்டும் இன்னும் இரக்கம் காட்டுவதேன்? இனம்களெல்லாம் பூலோக தேவர்களின் பூர்வீகச் சொத்துக்கள் என்ற நினைப்பிலா? அல்லது ஜமீனும் இனமும் இரட்டைக் குழந்தைகள். இவை இரண்டுமே ஏமாந்த காலத்தில் ஏற்றம் கொண்டோரின் தன்னல ஏற்பாடுகள். இவைகளால் பொது மக்களுக்கு எள்ளளவும் பயன் கிடையாது. இருந்தும் ஆனவந்தார் பேலிடத்தாரின் முகஸ்துதிக்கும் பூசுரர்களின் புன்னகைக்கும் முறிவு ஏற்பட்டுவிடக் கூடாதே என்ற எண்ணத்தால் இன்னமும் இனம்கள் விஷயத்தில் காலத்தைக் கடத்திக் கொண்டிருப்பது ஏற்ற செயலாகாது.

இன்று நாட்டில் உணவுப் பஞ்சமும், உடைப் பஞ்சமும். வேலை இல்லாத் திண்டாட்டமும், நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வருகின்றன. இவைகள் ஏற்பட ஆட்சியாளரின் அலட்சியப் போக்குத்தான் காரணம். சுயதேவைகளை பூர்த்தி செய்விடப் போகிறோம் என்று சொல்லிக்கொண்டு நாட்டில் உணவுப் பஞ்சம் ஏற்பட்ட பொழுது பிற நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களைத்தருவித்து சேகரித்து வைத்துக்கொள்ள தவறிவிட்டனர். அதன் விளைவால் இன்று சென்னை, பீகார் இவை இரு நவகாளிகளாக மாறி வருகின்றன. உணவுப் பஞ்சம் பெருகிவரவே இன்று அமெரிக்காவிடம் உணவுப் பேரம் பேசினார்கள் இந்த சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியாவில் தன்னுடைய ஆதிக்கத்தை நுழைக்க அஸ்திவாரம் நிறுவலாம் என்று அமெரிக்கா கனவு காண்கிறது. அமெரிக்கா அன்பைக் காட்டி தலையறுக்கும் தந்திரத்தை அறிந்து கொள்ளாத அமைச்சர் முன்ஷியார் எந்த வித ஆதிக்க நிபந்தனையுமில்லாது இந்த நாட்டிற்கு உணவுப் பொருள் உதவி செய்ய முன் வந்துள்ள இரஷ்யாவையும், செஞ்சீனாவையும் உதறித்தள்ளி அமெரிக்காவிடம் சரணடையமுயன்றுவிட்டார். அமைச்சரின் இந்த ஆகாத போக்கு அமெரிக்க ஆதிக்கப்பசிக்குநாட்டை இரையாக அளிக்க முன்ஷியார் இந்த செயலை செய்து விட்டார்.



என்றுமிலாத அளவு இன்று நாட்டிலே உடைப் பஞ்சம் வந்து விட்டது. குறிப்பாக சென்னை மாகாணத்தில் துணிகள் விலை ஒன்றுக்கு நான்காக உயர்ந்தும் அரிதாகிவிட்டது. அத்துடன் நெசவையே தொழிலாகக் கொண்டிருந்தபெரும்பான்மையான மக்கள் இன்று தங்கள் தொழிலுக்கு போதுமான நூல் கிடைக்காத காரணத்தால் தங்கள் தொழிலையும் இழந்து வயிற்றுப் பிழைப்புக்கு வேலையின்றி தினமும் பிணமாகி வருகிறார்கள். இந்த மாகாணத்திலுடைய நெசவாளரின் தேவைக்குரிய நூல்களையும், பம்பாய் அகமதாபாத் முதலிய இடங்களுக்கு ஏற்றுமதி செய்து விட்டு, எஞ்சி உள்ள நூல்களையும், இந்த மாகாண கள்ளமார்க்கெட் நூல் வியாபாரிகள் பதுக்கிவிட்டார்கள். இதனால் உடைநெருக்கடி ஏற்படவே கள்ள மார்க்கெட்டில் கைதேர்ந்த நம் நாட்டு துணி வியாபாரிகள், துணிகளை பதுக்கி விலைகளை உச்ச நிலைக்கு கொண்டுவந்து விட்டு விட்டார்கள். ஆதலால் ஆட்சியாளர் உடனடியாக வெளி இடங்களுக்கு நூல் ஏற்றுமதி செய்வதை நிறுத்தி விலையைக் கட்டுப்படுத்தி கட்டாய ரேஷனில் எல்லா நெசவாளர்களுக்கும் கிடைக்கும் வகையில் நூல் வினியோகம் செய்ய வேண்டும். அப்போதுதான் நெசவாளர்களின் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் குறைத்து, உடையைப் பொறுத்த மட்டில் இந்த மாகாணத்தின் மானத்தைக் காப்பாற்றக்கூடும்.

ஆட்சியில் காணப்படுகின்ற இத்தகைய குறைபாடுகளை எடுத்துக் காட்டி இவைகளைத் தீர்ப்பதற்கான ஏற்ற வழிவகைகளை எடுத்துக்கூறும் இயக்கங்களை எதிரிகளாகப் பாவித்து அவைகள்மீது அடக்குமுறை அம்புகளை தொடுப்பது எந்த ஒரு ஆட்சிக்கும் ஏற்ற செயலாகாது. அதுவும் மக்கள் ஆட்சி என்று சொல்லிக் கொள்கின்ற இந்த ஆட்சியில் அடக்குமுறைகள் தலைவிரித்தாடுகின்றன. இது எவ்வளவு வெட்கப்படவேண்டியதொன்றுகுறை என்பது எந்த ஆட்சியிலும் ஏற்படுவது இயற்கை, குறை என்று உணருங்கால் திருத்திக் கொள்ளுவதுதான் பகுத்தறிவுடமைக்கு அழகு. குறைகளைக் கூறும் இயக்கங்களை ஆட்சிக்கு உறுதுணையாகக் கொள்ள வேண்டும். இடித்துக் கூறும் வாய்ப்பு ஒரு ஆட்சிக்கு இல்லை எனில் அவ்வாட்சியினை கெடுப்பதற்கு எதிரிகள் இல்லாமலே அழியுமென்றும் பொருள் பட.

> 'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
> கெடுப்பார் இலானும் கெடும்''

என்று வள்ளுவனார் அழகாக அமைத்திருக்கிறார்.

அடக்குமுறை ஒன்றை துணையாகக் கொண்டு மக்களின் மன எழுச்சியை அடக்கி ஆட்சி நடத்தி விடலாமென்று எண்ணிய அனேக அரசுகள் அழிந்த வரலாற்று ஏடுகளை கனம் ஆட்சியாளர்கள் அறிந்திருப்பார்கள். அரசன் மக்களை அடக்கியாளத்தான் ஆண்டவனால் படைக்கப்பட்டான் என்று கூறிக் கொண்டு பாராளுமன்றத்தை தன் கைப்பொம்மையாக்கி வைத்துக் கொண்டு மக்களை மதியாது அட்டூழியங்கள் பலபுரிந்த இங்கிலாந்து முதலாம் சார்லஸ் என்ற மன்னன் பதினேழாம் நூற்றாண்டில் மக்கள் முன்னிலையில் பதை பதைக்கச் சிரச்சேதம் செய்யப்பட்டதும், நாட்டுமக்களின் வாழ்வை நசுக்கிப் பிழியும் அளவுக்கு ஆட்சிப் பொறுப்பை சீமான்களிடத்திலும், மதகுருக்களிடத்திலும் தத்தம் செய்துவிட்டு மக்களின் வரிப் பணத்தைத் தன்னுடைய களியாட்டங்களுக்கு வாரியிறைத்த பிரஞ்சு நாட்டு மன்னன்பதினாறும்லூயி அந்நாட்டு மக்களால் பதினெட்டாம் நூற்றாண்டில் எழுச்சியுற்று சிரம் அறுக்கப்பட்டதும், மக்களின் நலத்தில்நாட்டம்கொள்ளா இரஷ்ய சார் மன்னன் மக்களின் உழைப்பை தனது கோரிக்கைகளுக்கு விருந்தாக்கி வந்தான். மன்னன் போல்ஷிக் இயக்கத்தின் புரட்சியால் இந்த இருபதாம் நூற்றாண்டிலேயே மக்களால் பிணமாக்கப்பட்டான் என்பதும், சீனாவை சீரழித்து வந்த சிபித்து வந்த சிறுமதியாளன் சியாங்கேஷேக் வாழ்வில் மறுமலர்ச்சி காண கொதித்தெழுந்த அந்நாட்டு மக்களால் இன்று விரட்டப்பட்டு பார்மோசா தீவிலே பதுங்கிக் கொண்டு தனது எதிர்கால இருண்ட வாழ்வை எண்ணி யெண்ணி இரத்தக் கண்ணீர் வடித்துக் கொண்டு இருக்கிறான் என்பதும் சரிந்த சர்வாதிகார சாம்ராஜ்யங்களின் சரித்திரங்கள் காட்டும் சான்றுகளாகும்.

அறியாமை இருளிடையே அகப்பட்டு திக்கறியா நிலையிலே தேங்கி நின்ற மக்கள் இன்று விழிப்புற்று; உரிமை வேட்கையால் உந்தப்பட்டு தங்கள் வாழ்க்கை நிலை உயர குரலெழுப்புகின்றார்கள். அவர்களது இதயக் குமுறல் நாடெங்கும் எதிரொலிக்கத் தொடங்கிவிட்டது. எர்முனை போர்முனையாக மாறிவருகிறது. மக்களின் துடிப்பை துச்சமென எண்ணாது அவர்களது துயர் துடைக்க ஆட்சியாளர் முன்வரவேண்டும்.

மக்களிடத்தில் நல்வாழ்வு (மறுமலர்ச்சி) மலரவேண்டுமானால் இல்லாமை, கல்லாமை ஓட்டி பிணிகள் இனி இல்லாமல் ஆட்சியாளர் செய்யவேண்டும், அப்போதுதான் புண்பட்ட மக்களது வாழ்வு பண்படமுடியும். மனிதனை மனிதனாக மதிக்கும் மாண்பு மக்களிடத்தில் வளரமுடியும். இதற்கு ஆவன செய்ய ஆட்சியாளர் முற்படவேண்டும். அப்போதுதான் மக்கள் மறுமலர்ச்சி அடைவர் ஆட்சியும் மாட்சி நிறைந்ததாக ஆகமுடியும். இல்லையேல் ஆட்சியின் அடிப்பீடமே ஆட்டங்கண்டுவிடும்.

---

## சீர்திருத்தத் திருமணம்

சென்னை புளியந்தோப்பு போலு நாய்க்கன் தெரு T. குப்புசாமி அவர்கள் மகன் செல்வன் சண்முகத்திற்கும், ஆர்ப்பாக்கம் A. S. திருமாகறல் அவர்கள் மகள் செல்வி புஷ்பாவதிக்கும் 'போர்வாள்' ஆசிரியர் காஞ்சி மணிமொழியார் தலைமையில் 1—11—51 காலை 7-30 மணிக்கு சீர்திருத்தத் திருமணம் நடைபெற்றது.

திருமண நினைவாக போர்வாள் வளர்ச்சிக்காக ரூ. 5 நன்கொடை அளிக்கப்பட்டது.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

திபேத்தின் சரித்திரம் சரித்திராசிரியர்களுக்கு, கி. பி ஏழாவது நூற்றாண்டுக்குப் பின்னிருந்த நிகழ்ச்சிகள் மூலமாகத்தான் கிடைத்திருக்கின்றன. கி. பி. ஏழாவது நூற்றாண்டுக்கு முன் திபேத் நிலை சரித்திர ஆசிரியர்களுக்கே ஒரு புரியாத புதிராக இருந்துவருகிறது. எந்த அளவுக்கு திபேத் மற்ற உலக மக்களினத்திலிருந்து மறைந்து கொள்ள முடியுமோ அந்த அளவுக்குமறைந்துகொண்டுதானிருந்தது. ஆனால், ஏழாம் நூற்றாண்டிலிருந்து அதன் நிலை ஓரளவு நாமெல்லாம் புரியக்கூடிய முறையில்—சரித்திராசிரியர்களால் உண்மை நிலை அதன் படம் பிடித்துக் காட்ட முடிகிறது!

ஆதிகால திபேத்தியன், சென்-ரே-சியை கடவுளின் அவதாரம் என்று கருதி வந்தான். சென்-ரே-சி, கருணையின் எல்லை என்று திபேத்தியர்களால் போற்றப்படும் குலதெய்வம். அதன் வழித்தோன்றல்கள்தான் நாங்களென பெருமையடித்துவந்தனர் திபேத்தியர். அவர்களின் அந்த நிலையை மதவாதிகள் வளர்த்துவந்தனர். எத்தனை எத்தனையோ கற்பனைக் கதைகள் கருணைக் கடவுளைப் பற்றிக் கிளம்பின. அத்தனையும் சென்ரேசியின் அற்புதத் திருவிளையாடல்களென எண்ணி திபேத்தியர் மகிழ்ந்தனர்! சூதுத் திட்டம் சுயநலத்துணையால் கோர வடிவெடுப்பதை அப்போது யாரும் எண்ணவில்லை என்பதோடு அதை விளக்கிக் கூற ஆள் கிடைப்பது எப்படி? குருட்டு மண்டபத்திலே திபேத்தியர் அத்தனை பேருமே நுழைந்துகொண்டனர்.

அந்த 7-ம் நூற்றாண்டிலே அரசனாக இருந்த சாங்-சான்-காம்போ என்பவனும் மக்களின் குருட்டுப் போக்கை மேலும் வளரச்செய்தான். காம்போ ஒரு பெரிய வீரன் என்பதை சரித்திராசிரியர்கள் பலபடக் கூறுகிறார்கள். சீனத்தையும், வட இந்தியாவையும் காம்போ போருக்கழைத்து வெற்றிபெற்றிருப்பதொன்றே காம்போவின் வீரதீரத்தை உலகுக்கு அறிமுகப்படுத்துகிறது! போர் பல செய்து வெற்றிமாலை சூடிய இதே காம்போவால்கூட பழமை அழிக்கப்படவேண்டியதொன்று என்று எண்ண முடியவில்லை! பரிதாபம்... அவனது வீரம் தீரம் எல்லாமாகச் சேர்ந்து நாடுபிடிக்கும் நப்பாசையிலேயே இருந்து வந்தது. அவன் எண்ணவில்லை, நாம் போரிடவேண்டியது — மாற்று நாட்டு அரசர்களிடமல்ல மக்களை மடியச் செய்துவரும் மதவாதிகளிடம் நமது வீரதீரத்தைக் காட்ட வேண்டுமென; காம்போ எண்ணவில்லை என்பதோடு பழமையின் கொடுமையை, அதன் நாச சக்தியைப்பற்றி நினைக்கவே மறந்து போய்விட்டான். நல்ல சட்ட நிபுணன் காம்போ என்று வரலாற்றாசிரியர்களால் வாழ்த்தப்படுகிறது! புத்தமதத்தை திபேத்தில் தலைநீட்டும்படி செய்த முதல் மன்னனும் காம்போதான் என்று போற்றுதலையும் சரித்திராசிரியர்கள் அந்த மன்னனுக்கு அளிக்கிறார்கள் என்றாலும், நமது கவனத்தைக் கவருவதெல்லாம், புத்தர் கொள்கைகளை மதமாகத் தன் நாட்டிலே உலவ அரும் பணியாற்றிய காம்போ சீனம்போன்ற பெரு நாடுகள்மீது ஆண்டுக்கணக்காகப் போர் நடத்தி வந்திருக்கின்றான் என்பதே இதிலிருந்து தெளிவாக நமக்கெல்லாம் புரிவது என்னவென்றால் எந்தெந்தக் கொள்கையை எப்படி எப்படிப் புரிந்து அமுல் நடத்துவது என்ற நிலையிலேயே காம்போ இல்லாமல் தன் மனதுக்குப்பட்ட எதேச்சதிகாரத்தில் அவன் காலத்தில் திபேத்தை ஆண்டுவந்தான். காம்போவின் மனநிலையை நன்றாக அறிந்திருந்த மதவாதிகள் மேலும் மேலும் துதி பாடி மாற்று நாட்டுமீது காம்போவை போர் தொடுக்கும்படி செய்துவிட்டு, மன்னன் ஊரிலே இல்லாத சமயம் தங்களது—தர்பார் ராகத்தை மதவாதிகள் இசைத்து வந்தனர். காம்போ சீனத்தின்மீது போர் செய்து வெற்றிகண்ட சந்தர்ப்பத்திலே, சீன அரச பரம்பரையில் தோன்றிய மாதொருத்தியைக் கண்டு காதலித்துத் திருமணமும் முடித்துக் கொண்டான். அவளின் தூய உள்ளத்தால்.... காம்போ சிறுகச் சிறுக திருத்தப்பட்டுவந்தான்! உண்மையாக ஆட்சியை எப்படி இயக்குவது? புத்தரின் உண்மைக் கொள்கைகள் என்னென்ன?....எனபவைகளையெல்லாம் அந்த சீனத்து அழகி விளக்கிக் கூறியதற்குப் பின்பு ஆட்சிப் பொறுப்பை ஆர்ப்பாட்டமின்றி காம்போ நடத்திவந்தான்! காம்போவின் ஆட்சியில்தான் லாசாவை திபேத்தின் தலைநகராக ஆக்கினான். அங்கே பொடா என்ற பிரசித்திபெற்ற அழகிய அரண்மனையையும் அமைத்தான். தலைலாமாக்கள் பரம்பரை பரம்பரையாக அந்த அரண்மனையிலே வாழ்ந்துவர அப்போதுதான் காம்போவால் அனுமதிக்கப்பட்டார்கள்!

காம்போவின் மறைவுக்குப் பிறகு மாங்சன் என்ற பெயருடைய காம்போவின் மகன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டான். இவனது ஆளுகையிலாவது பழமைப் போக்குகள்—ஓரளவுக்கு ஒழிக்கப்பட்டு



நல்லாட்சியூர் நோக்கி திபேத் பயணம் செய்யுமென உலகினர் உள்ளத்திலே நம்பிக்கை நட்சத்திரம் ஒளிவிட்டுக் கொண்டிருந்தது! ஆனால்.......நிலை காம்போ ஆட்சியைப் போன்றதாகத்தானிருந்தது! அவனுக்குப் பிறகு ட்சுக்—ட்சா என்ற அவன் மகன் பட்டமேறினான்! அவன் நிலையும் முன்னது போலவே! அதற்கும் பிறகு டிசாங் சிங்காதனமேறினான்! நாடு பிடிக்கும் ஆசை இவனுக்கு உச்ச நிலையிலே இருந்தது. திபேத் மக்கள் என்ன இழி நிலையிலே வாழ்ந்தாலும் தமக்கு வேலை இல்லையென ஊர் சுற்றி நாடுகளை வேட்டையாடினான். மேற்கு திபேத்தின் பல பாகங்கள் அந்நியர் பிடிப்பிலிருந்து டிசாங் முயற்சியினால் விடுவிக்கப்பட்டது! இவனது ஆளுகையிலே உள் நாட்டு மதவாதிகள் மட்டும் பேயாட்டம் ஆடவில்லை. வெளிநாட்டிலிருந்தும் மத குருக்கள் திபேத்துக்கு வருகை தந்தனர். வெளிநாட்டிலிருந்து வந்த பழமைக் குருக்களும், உள் நாட்டிலே யிருந்த பழமைக குருக்களுமாகச் சேர்ந்து கொண்டு வீதிக்கு வீதி மடாலயங்களைத் தோற்றுவிப்பதும், கற்பனைப் புராணங்களை ஏடுகளிலே எழுதி மக்களிடம் நீட்டுவதுமாக பழமைப் போக்கை திபேத்தின் மூலை முடுக்கெல்லாம் வளர்த்துவரத் துவங்கினர், வேக வேகமாக! 9-வது நூற்றாண்டிலே ரால் பாசான் என்ற அரசன் பட்டத்தை ஏற்றுக் கொண்டான். அந்த 9-வது நூற்றாண்டிலே வேத விளக்கவுரையாளர்களும் மத சம்மந்த நூல்களும் மலிந்தன! புத்தர் கொள்கைகளை மதமாகப் புகுத்தி பழமையை அதிலே எந்தெந்த உருவிலே நடமாட விடமுடியுமோ அது அவ்வளவையும் தான் விரும்பிய வகையில் அரசன் ரால் பாசான் பணியாற்றினான். இந்தப் போக்கு அரசனின் தம்பி லாங்தர்மாவுக்குப் பிடிக்கவில்லை என்பதோடு அவன் திபேத்திலே புத்த மத எதிர்ப்பு இயக்கத்தையும் நடத்தி வந்தான், நாளடைவிலே எதிர்ப்பு இயக்கத்தின் தலைவனாக இருந்த லாங்தர்மா......அரசனின் தாக்குதலைத் தாங்கமுடியாத நிலையிலே யிருந்தவன்.........ரால் பாசானைக் கொலை செய்துவிட்டு—சிங்காதனத்தைக் கைப்பற்றிக் கொண்டான்.

அப்போது அங்கே பெரிய அளவிலே பரவிவந்த புத்த மதத்தினருக்கு இது சகிக்க முடியாத அவமானமாகிவிட்டது! கொலைக்குப் பதில் கொலை செய்ய புத்தமத வாதிகள் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து வந்தனர். அவர்கள் ஆசையையும் விரைவிலேயே தீர்த்துக்கொண்டனர்—லாங் தர்மாவை குத்திக் கொலை செய்ததன் மூலமாக!

லாங் தர்மா ஒழிக்கப்பட்டதற்குப் பிறகு பரம்பரை பரம்பரையாக திபேத்தை ஆண்டு வந்த முறைக்கு முடிவு ஏற்பட்டது. திபேத்தை இதுவரை ஆண்டுவந்தவர்களின் பரம்பரை லாங் தர்மாவுக்குப்பின் ஆட்சி பீடம் ஏறவே இல்லை! லாங் தர்மா ஒழிக்கப்பட்டதும்—குட்டி ஜமீன்கள் கொட்டம் எல்லை மீறியது. துண்டு துண்டாக திபேத்தின் பல பகுதிகளிலே ஜமீன் வாரிசுகள் ஆதிக்கத்தைத் துவக்கினர். திபேத்தியர் பல வழிகளிலே தாழ்த்தப்பட்டனர். அரசியலிலே அனாதைகளாக்கப்பட்டனர். சமூகத்திலே மதகுருமார்களின் பேயாட்டம், வாழ்க்கை—மரணபரிவாசமாகியது. இம்மாதிரியான முறைகளிலே திபேத் மக்கள் சிதைந்துகொண்டிருந்தனர்.

பதினொன்றாம் நூற்றாண்டிலேயிருந்து — லாமியம் (Tamaism) திபேத்திலே பரவ ஆரம்பித்தது. ஆட்சிபீடத்திலும் சாக்கிய லாமாக்கள் பிரசித்தமடைந்தார்கள். சிறுகச் சிறுகப் பரவி வந்ததுபோய் திபேத் முழுவதுமே லாமியம் நன்றாகப் பரவியது. அதன் வளர்ச்சிக்கு அப்போதைய சீன மன்னனாக இருந்த குப்லேகான் பெரிய அளவிலே ஆதரவு தந்தான். அந்த ஆதரவின் அஸ்திவாரத்திலே சாக்கிய லாமாக்கள் 70 ஆண்டுகள் வரை (1845-ம் ஆண்டுவரை) தங்களது பரம்பரை ஆட்சியை திபேத்திலே நடத்தி வந்தனர்.

சாக்கிய லாமாக்கள்—பழமையின் பிரதிபிம்பங்கள்! எவ்வளவு முடியுமோ அவ்வளவு மந்த புத்தியை மத போதனை மூலமாக மக்களிடம் பரவச் செய்தார்கள். விநாடிக்கு ஒரு தத்துவார்த்தம் பேசி—எதைக் கண்டாலும் அதற்கோர் புராண முலாம் பூசி—மனிதன் எந்நேரமும் நடுநடுங்கிக்கொண்டேயிருக்கும் ஒரு பிராணியின் நிலையிலே வாழ்ந்துகொண்டிருந்த திபேத் நாட்டை சாக்கிய லாமாக்கள் ஆண்டனர்!

1850-லே, சாக்கிய மதகுரு ஒருவர் திபேத் ஆட்சியை நடத்திவந்தார். அவரை சாங்சப் கியால்ட்சேன் என்ற பெயருடையவன் கொலை செய்துவிட்டு ஆட்சிபீடமேறி நீதியா வம்சத்தைத் துவக்கிவைத்தான். இவர்களின் ஆட்சியும் எந்த நோக்கிலும் ஆட்டம் கொடுத்துவிடுமென்றுதான் எல்லோரும் எதிர்பார்த்து வந்தனர்.

(10-ம் பக்கம் பார்க்க)

போர்வாள்

சென்னை 3—11—51 சனிக்கிழமை

# தேர்தல் கடைகள் திறக்கப்பட்டு விட்டன

அரோதி புரட்டப்படுகிறது;

ஆருடம் கணிக்கப்படுகிறது;

ஆலோசனை அர்த்தராத்திரியிலே நடத்தப்படுகிறது;

அடித்தல், திருத்தல், மாற்றல், நுழைப்பு அத்தனையும் அமோக [illegible] நடக்கின்றன;

டில்லி தர்பார் இருபத்திநான்கு மணிநேரமும் இயங்கிக்கொண்டிருக்கிறது;

விமானங்கள், மாகாணத் தலைநகரங்களிலிருந்து டில்லியை நோக்கிப் பறந்தவண்ணமுள்ளன;

பயத்தாலும், மயத்தாலும், ஆசை வார்த்தைகளாலும் அநேக பணமூட்டைகளின் இரும்புப் பெட்டிகள் திறக்கும்படி செய்யப்படுகின்றன;

ஆயிரம், பதினாயிரம், இலட்சம் என்ற அளவில் இரும்புப் பெட்டியில் இருந்த பணம் ஆருடம் கணிக்கும் அற்பர்கள் கைக்கு மாறுகின்றன;

சோகம்—ஒரு சிலரைக் கப்பிக்கொண்டிருக்கிறது.

சூழ்ச்சி—தன் திறமை முழுதும் காட்டி வேலை செய்கிறது;

சிலர் முணுமுணுக்கிறார்கள், சிலர் பரபரப்பு அடைகிறார்கள், சிலர் குழம்புகிறார்கள், சிலர் ஆத்திரப்படுகிறார்கள், சிலர் ஆகட்டும் ஒரு கை பார்க்கிறேன் என்கிறார்கள், சிலர் ஐம்பதாயிரம் அலாதியாக எடுத்து வைத்தாச்சு என ஆர்ப்பரிக்கிறார்கள், சிலர் எத்தனை பணப்பை காலியாகுமோ அறியேன் கச்சி ஏகம்பனே என ஏங்குகிறார்கள், சிலர் காலியாகும் பைகளுக்கும், பின்னால் நிரம்பப் போகும் பைகளுக்கும், வரவு செலவு கணக்குப்போட்டு கிடைக்கக்கூடிய நிகர லாபத்தை முடிவு [illegible] கட்டுகிறார்கள், சிலர் இயக்கத்தை விலை பேசுகிறார்கள், சிலர் தமது பழங்கால நடைமுறைகளைப் பரிசீலனை செய்து பார்க்கிறார்கள், சிலர் என்னை ஆதரியுங்கள் என்று எந்த முகத்தோடு பொது மக்களைக் கேட்பது என ஏங்குகிறார்கள்.

ஏக்கம், கலக்கம், குழப்பம், முணுமுணுப்பு பரபரப்பு, ஆத்திரம், ஆர்ப்பரிப்பு இவைதான் இன்றைய அரசியல் வானில் காணப்படும் அரிய காட்சிகள்.

1951-ம் ஆண்டின் இறுதியும்—1952-ம் ஆண்டின் தொடக்கமும் அநேக அரசியல்வாதிகளுக்குத் தம் உள்ளத்தைக் குத்திப் பிளக்கும் ஈட்டி முனைகளாகக் காட்சி தருகின்றன.

சென்னை படாதபாடு பட்டது; இந்த நிலை ஏற்படுவதை இன்னும் சிலநாள் தள்ளிப்போட. ஆனால் ஆண்டவன் சந்நிதியில் இவர்கள் அடங்கி, ஒடுங்கவேண்டியதுதானே. 'முடியவே முடியாது' என்று டில்லி தேவதை தந்த தாக்கீது சென்னை தேசியத் தம்பிரான்களை பேச்சு மூச்சற்ற பிண்டங்களாக்கிற்று.

வடநாட்டுத் தலைவர்கள் தென்னாட்டை ஒருவர்பின் ஒருவராகப் படையெடுக்கிறார்கள். தங்கள் தங்கள் கீர்த்திப் பிரதாபங்களை கடைவைத்துக் காட்டுகிறார்கள்.

ஐந்தாண்டுகளுக்கு முன்னே நீங்கள் அண்ணன் கடையில் வாங்கிய சரக்கு சாயம் வெளுத்து விட்டதைப் பாருங்கள்; பகட்டாக இருந்ததைக் கண்டு அன்று ஏமாந்துவிட்டீர்கள் மீண்டும் ஏமாந்து அந்த எத்தன் கடைக்குப் போகாதீர்கள்; அவன் வைத்திருப்பது அத்தனையும் பழைய சரக்கு; உளுத்துப்போனவை, புழுத்துப்போனவை, அழுகிப்போனவை, சாயம் வெளுத்தவை, சாக்கடை நாற்றம் வீசுபவை, சல்லிக்காசு பெறாதவை, சார்ந்தாரைக் கொல்லும் சமய சஞ்சீவி போன்றவை. அந்தக் கடையருகில் சென்றாலே காய்ச்சல் தோன்றும், வாசனைபட்டாலே வாழ்வு குலையும். இனியொரு முறை அண்ணன் கடையை அணுகாதீர்கள். 'அண்ணன் கடை ஆபத்து' என்று மந்திர உச்சாடனம் செய்யுங்கள் என்று அவர்கள் கூறுகிறார்கள்.

'தறுதலைத் தம்பிமார்கள்' கூறுவதைக் கேட்கவா போகிறார்கள் தாசானுதாசர்கள்—எங்கள் தியாகத் தழும்புகள் மறைந்தா போய்விட்டன? நாங்கள் பெற்ற ஐந்து ஏக்கர் நிலம் அவற்றின் அடையாளச் சின்னந்தானே! அவதார புருஷர் காந்தி மகான் அறுத்தெறிந்த பாரத மாதாவின் அடிமைச் சங்கிலி அதோ கிடக்கிறதே, அதையாவது நினைத்துப் பார்க்க மாட்டார்களா? மஞ்சள் பெட்டியின் மகத்துவம் மாயமாக இவ்வளவு விரைவில் மறைந்தா போய்விடும்! எத்தனை ஆயிரம் பேருக்கு பெர்மிட், எத்தனை ஆயிரம் பேருக்கு லைசென்ஸ், எவ்வளவு பேருக்கு கிம்பளம், லஞ்சலாவண்யம் இவைகளைக் கொடுத்துக் காப்பாற்றி—மண்ணாங்கட்டிகளாகக் கிடந்தவைகளை மாணிக்கங்களாக மாற்றியிருக்கிறேன், அவைகளெல்லாம் அற்புத சக்திபெற்று வேலை செய்யாமலா போகும்! என்னிடம் உள்ள செல்வாக்கு எவ்வளவு சக்தி எப்படிப்பட்டது, அதிகாரம் எத்தகையது, பணபலம் எவ்வளவு, இத்தனையும் செய்யாத வேலையை இந்தத் தம்பிமார்கள் செய்துவிடவா போகிறார்கள். தாந்தோன்றித் தம்பிமார்



களில் பலர் நேற்றுவரை நம் வீட்டில், நம் நிழலில், நம் உதவியில், கூடிக்குலவிக் கொண்டு வாழ்ந்தவர்கள்தானே! இன்று நம்மை எத்தன் என்று கூறினால் யார் ஏற்றுக்கொள்வார்கள் என்று இறுமாப்புடன் கூறித் திரிகிறான், அண்ணன்.

நான் நீதிவான்; என் தராசு பழங்காலத் தமிழர் தராசு. புதிய முள் தராசு அல்ல. கோல்கோணாது நிறுத்துத் தரும் குணவான் நான், என் கடைக்கு வர ஏன் அஞ்சுகிறீர்கள், என்று கேட்கிறார்கள் அருமையான சரிகைத் தலைப்பாவுடன் காட்சி தரும் சற்குண சீலர்கள்.

எல்லாக் கடைகளும் அழகாகவே இருக்கின்றன. அங்குள்ள சாமான்களும் கண்களையும் கருத்தையும் கவர்கின்றன; என்றாலும் இந்நாட்டிற்கேற்ற சரக்கு அங்கு இல்லை என்றே பெரும்பாலோர் கருதுகிறார்கள். ஆகவே, அந்தக் கடைகள் எதனையும் எட்டிப் பார்க்காமல் அவர்கள் இன்றுவரை இருக்கிறார்கள்.

திறக்கப்பட்ட கடைகள் அத் [illegible] தனையும் தேர்தல் கடைகள். விற்கப்பட்டிருக்கிற சாமான்களெல்லாம் தேர்தல் வாக்குறுதிகள். விற்பனை செய்யக் காத்திருப்போர்கள் பலரும் அரசியல் கட்சித் தலைவர்கள். அவர்கள் தங்கள் சாமான்களை ஏற்றுக்கொள்ளுமாறு வாக்காளர்களை வருந்தி அழைக்கிறார்கள். திராவிட நாட்டுப் பிரிவினைத் திட்டமும் திராவிட இயக்கக் கொள்கைகளான சமுதாய, அரசியல், பொருளாதார சமத்துவத் திட்டமும், ஒருங்கே எந்தக் கட்சியின் தேர்தல் வாக்குறுதியிலும் இல்லாத காரணத்தால் அவைகளை நெருங்காமல் இன்றுவரை திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் விலகி நிற்கிறார்கள்.

திராவிட இயக்கத்தவர்களை ஒரு காலத்தில் தாக்கியவர்கள் இன்று அணைக்க வருகிறார்கள். அண்ணாமலைப் பல்கலைக்கழக திராவிட மாணவர்கள் அன்று பச்சை ரத்தம் பரிமாற நேர்ந்தது யாருடைய கொடுஞ்செயலால் என்பதை மறந்துவிடுவோம்.

'ஈரோட்டுப் பாதை புரட்சிப் பாதையல்ல, பொது உடைமைப் பாதை அல்ல, பொதுமக்கள் பாதையுமல்ல, சாதிமத தாழ்வுகளிலிருந்தோ சமூகக் கொடுமைகளிலிருந்தோ, ஜமீன்தார் முதலிய முதலாளித்வ சுரண்டல்களான சகலவித கொடுமைகளிலிருந்தோ தமிழ் மக்களை விடுவிக்கும் பாதையுமல்ல, மக்கள் நெருங்கத் தகாத பாதை அது' என்று ஒருகாலத்தில் எழுதியவர் யார் என்பதையும் மறந்துவிடுவோம்.

நேரு சர்க்காரைக் கவிழவிடாது காப்பாற்றுவோம் என்று 1948-ல் முழக்கம் செய்தவர்கள் யார் என்பதையும் மறந்துவிடுவோம்.

குமாரராஜாக்களின் குலாம்கள், பணமூட்டைகளின் பாதந்தாங்கிகள், ஏழைத் தொழிலாளிகளின் எதிரிகள் என்று பெரிய பெரிய கொட்டை எழுத்துக்களில் அட்டைகளை எழுதி ஈரோட்டு மாநாட்டுச் சமயம் தெருக்களில் தொங்கவிட்ட காட்சியைக்கூட கண்களைவிட்டு அகற்றிவிடுவோம்.

ஆனால், எந்த இலட்சியத்துக்காக தாலமுத்து நடராசன் உயிர்விட்டனரோ அந்த இலட்சியம் ஏற்றுக்கொள்ளப்படவேண்டும். எதை ஒழிப்பதற்கு இரண்டாயிரம் [illegible] தோழர்கள் சிறை புகுந்தார்களோ அதை ஒழிப்பதற்கு உறுதி கூற வேண்டும். எந்த வகுப்புத் துவேஷக் காரணத்தைக் கொண்டு நமது நாடகங்களும், புத்தகங்களும், பேச்சுக்களும் தடைவிதிக்கப்படுகின்றனவோ அந்தக் காரணம் பற்றி அவர்கள் கருத்து விளக்கப்படவேண்டும்.

நாம் திராவிட நாட்டின் எல்லைக் கோட்டை இழுக்க முயற்சிக்கும் போதும், பிறரது சுரண்டலைத் தடுக்க முனையும்போதும் ஒத்துழைப்பு கிடைக்காவிட்டாலும் எதிர்ப்பாவது இல்லாமல் இருக்குமா என்பது தெளிவாக்கப்பட வேண்டும்.

வடநாட்டாரின் பிடிவாதத்தாலும், ஆதிக்க வெறியினாலும், அவர்களை நோக்கி 'டில்லி சலோ' என்று நாம கூறவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிற நேரத்தில், அங்கிருந்து அகதிகள் என்ற பேரால் ஐம்பதாயிரம் பேர்களை அழைத்துவந்து ஆயிரக்கணக்கான திட்டங்களைத் தீட்டிக்கொடுத்து அவர்களுக்கு ஆதரவு தரக்கூடிய அரசியல் வட்டாரம் எதுவாக இருந்தாலும் நாம் அதை ஏறெடுத்துப் பார்ப்பதும் கூடாது.

நாம் எத்தனையோ 'கரூர்'களை, 'சேலம்'களை, 'மதுரை'களை, 'அண்ணாமலைநகர்'களை 'உடையார்பாளையம்'களை, 'தேனி'களை, 'குன்றத்தூர்'களைக் கடந்திருக்கிறோம். இன்னமும் ஏற்பட இருக்கும் இன்னல்கள் அத்தனையும் ஏற்கும் உள்ள உரம் படைத்த இளைஞரேறுகள் ஏராளமாக இருக்கிறார்கள். பிற கட்சிகளின் உதவி பெற்றோ, பிறகட்சிகளுக்கு உதவி செய்தோ வளரவேண்டிய கீழ்நிலையில் தி. மு. க. இன்று இல்லை.

காங்கிரஸ் கட்சி தேர்தலில் படுதோல்வி அடையவேண்டும் என்பது நம் முழு ஆவல் என்றாலும் அதன் தோல்வி ஒன்றே நம் குறிக்கோளாக இருக்கமுடியாது.

அது இப்போது தோல்விப் பாதையை நோக்கி வேகமாக உருண்டுகொண்டிருக்கிறது. வடக்கிலும் தெற்கிலும் நடந்த இரு தேர்தல்கள் காங்கிரசுக்குத் தோல்வியைத் தந்திருக்கின்றன. காங்கிரசை விட்டு விலகும் மக்கள் தொகை நாளுக்கு நாள் வளர்கிறது. தேர்தல் கமிட்டியிலிருந்து தாண்டன் போன்றவர்களே விலகு [illegible] காங்கிரஸ் அபேட்சகர்களாகப் பொறுக்கப்பட்டவர்கள் தாங்கள் காங்கிரஸ் கட்சியின் சார்பில் நிற்க விரும்பவில்லை எனத் தந்திமூலம் மறுக்கிறார்கள். காங்கிரஸ் கூடாரத்திற்குள்ளாகவே குத்தும் வெட்டும் நடக்கிறது. காங்கிரஸ் கரைந்துவருகிறதென்பதற்கு இவைகளைவிட வேறு என்ன சான்று வேண்டும்!

> 'கொள்கைகளைவிட பணமும் ஜாதியுந்தான் அபேட்சகர்களைப் பொறுக்குவதில் முக்கியமாகக் கருதப்பட்டது' என்று காமராசர் பலர் அறிய வெட்கமின்றிக் கூறும் அளவுக்குக் காங்கிரஸ் கரைந்துவிட்டது.

பணத்துக்கும் ஜாதிக்கும் முதல் இடம்

கொள்கைகளோ காற்றில்பறக்கவிடப்படுகின்றன. கொள்கையில் நம்பிக்கையை இழந்துவிட்ட கட்சி எவ்வளவு நாட்களுக்கு வாழமுடியும்!

காங்கிரஸ் அஸ்தமனமாகிக்கொண்டிருக்கிறது. பொதுமக்களின் கண்கள் தேசியவாதிகளைக் காண்பதற்குக் கூசுகின்றன.

(18-ம் பக்கம் பார்க்க)

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனால் 1635-ம் ஆண்டு வரை சித்யா வம்சத்தார் ஆட்சி திபேத்திலே — நீடித்திருந்தது! 1635-லே சாங் மாகாணத்தைச் சேர்ந்த சிற்றரசனால் சித்யா வம்சத்தினர் ஆட்சிபீடத்திலிருந்து விரட்டியடிக்கப்பட்டனர்.

பதினேழாம் நூற்றாண்டும் துவங்கியது— திபேத்தியருக்குக் கெட்டகாலம் முன்னேயும்விடப் பெரிய அளவு விரிந்தது! சாங்—காபா என்ற பெயரிலே அப்போதைய திபேத்திலே உலவிய லாமா மதகுரு நல்ல முறையிலே பிரசித்தியடைந்தான்! அவன் இட்ட பணியை முடிக்க திபேத்தில் லட்சோபலட்சமாக மக்கள் காத்திருந்தனர். இந்த இவ்வளவு செல்வாக்கையும் மதப் பிரச்சாரத்தை முன் வைத்து சாங்—காபா பெற்றிருந்தான். பரிசுத்த குலம் என்ற ஒரு பிரிவை திபேத்தியரிடையே ஏற்படுத்திவைத்து அவர்களிடம் சாங்—காபா கடுமையான சட்ட திட்டங்களை அமுல் நடத்தினான். மது அருந்தக் கூடாது. திருமணம் போன்றவைகளை பரிசுத்த குலத்தினர் செய்யாது தடுத்து, துறவி நிலையை திபேத்திலே புகுத்தினான். துறவி நிலையை விரும்பிய மக்கள் கூட்டம்....சிலநாள்வரை சாங் — காபாவைப் பின்பற்றினர். நாளடைவிலே மஞ்சள் குல்லாய்கள் என்ற பெயரும் பரிசுத்த குலத்தினருக்கு ஏற்பட்டது. சாங்—காபா மதத் துறையிலே செல்வாக்கடைந்து காலப்—போக்கிலே ஆட்சி பீடத்தையும் கைப்பற்றிவிட்டான். சந்தர்ப்பத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்த அந்த சாது சிரோன்மணி டாஷி—லாமா என்ற பெயருடைய தனது மகனுக்கு சிங்காதனத்திலே இடம் அமைத்துக் கொடுத்தான்! சாங்—காபாவுக்கு மகன் ஒருவனிருப்பது ஆச்சரியமானது தான்! திருமணமே செய்து கொள்ளாதவர்களின் கூட்டணியைச் சேர்த்து...துறவிக் கோலத்தை நாட்டிலே வளர்க்க எண்ணியவர் என்பது மட்டுமல்ல — அந்தத் திட்டத்தை நடைமுறையிலே காட்ட பெரிய தோர் இயக்கங்கண்ட சாங்காபாவுக்கு மகன் எப்படித் தோன்றினான் என்பதுதான் ஆச்சரியமானது! அவனைப் பின்பற்றியவர்களும் அதுபற்றி சிந்திக்கவேயில்லை......அந்த அளவுக்கு குருட்டு நம்பிக்கை அப்போது திபேத்திலே உலா வந்தது!

டாஷி—லாமாவும் மிகக் குறுகிய காலத்திலேயே மாண்டுபோனான். மஞ்சள் குல்லாயினருக்கு இது பெரிய ஏமாற்றமாகி விட்டது. வழிவழியாகத் தங்கள் ஆட்சியை ஸ்தாபிக்க நினைத்திருந்த அவர்கள் ஆட்சிபீடம் குறுகிய காலத்திலேயே அவர்களிடமிருந்து சென்றுவிடுவதைக் காண மனம் துடித்தனர்.

ஆகவே ஏதாவது திருவிளையாடல் நடத்தி மீண்டும் மஞ்சள் குல்லாய்க் காலத்தை ஸ்தாபிக்க அவர்கள் திட்டமிட்டனர். அவர்களின் திட்டப்படியே மக்களின்—முன் புதிய திருவிளையாடல் புராணத்தை நீட்டினர்! மாண்டுபோன டாஷி—லாமா குழந்தை உருவத்திலே மீண்டும் திபேத்தில் அவதரித்திருப்பதாகக் கூறி, யாரோ ஒரு சிறுவனைப் பிடித்து ஆட்சியிலே அமர்த்தி மீண்டும் அவர்கள் பரம்பரை ஆட்சியைத் துவக்கினர்! இதற்குப் பின்னர் தொடர்ந்து அரசர்கள் திருவிளையாடல்கள் மூலமாகவே தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தார்கள்!

அந்தத் திருவிளையாடல்கள் மூலமாகவே தலை லாமாக்கள் வரிசையிலே மூன்றாவது அரசனாக சோனம் யொட்ஸோ என்பவன் ஆட்சிபீட மேறினான். மதக்கருத்தை வேகவேகமாக அவன் வளர்த்தான். வெளி நாடுகளிலேகூட மதப்பிரச்சாரத்தை நடத்துவதிலே அதிக சிரத்தை கொண்டிருந்தான்!

தாலைலாமா வரிசையிலே ஐந்தாமவனாக — லோப்சாங் — யொட்சோ, என்பவன் அரச பீடமேறினான். இதுவரை ஆட்சிபீடத்திலே யிருந்த அரசர்களாவது தாங்களெல்லாம் கடவுளின் வழித் தோன்றல்கள் என்று கூறிய அளவோடாவது நிறுத்திக்கொண்டார்கள் ஆனால் லோப்சாங் தானே கடவுள் எனக்கூறி ஆட்சியைத் துவங்கினான். தன் சொல், செயல், சிந்தனையெல்லாம் கடவுளின் தன்மையது...அதிலே குற்றங்காணவோ எதிர்த்துப் பேசவோ எவரும் முன்வரக் கூடாதென்ற எச்சரிக்கையின் மூலமாக எதேச்சதிகாரத்தைத் துவக்கினான்! கோலாகலங்களை வளர்ப்பதிலும்; அழித்தும் பிளவும் பட்டுப்போயிருந்த மடாலயங்களைப் புதுப்பிப்பதுமாக அந்தக் கடவுள் அவதாரம் திபேத்திலே உலவி வந்தது. சீன ஆட்சிக்கும்— திபேத்துக்கும் அப்போதைய தொடர்பு வளர்ந்திருந்ததால்... லோப்சாங் சீன விருந்தாளியாக அழைக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டான். வெளி நாடுகளிலும் அந்தக் கடவுள் அவதாரத்துக்குப் புகழ் வளரவே தன் ஆட்சித் துணைக்கு ஸாங்யே யொட்ஸோ என்பவனை ரீஜண்டாக நியமித்துக்கொண்டது! 1680-ல் அந்தக் கடவுள் அவதாரம் மாண்டு ஒழிந்தது! சூழ்ச்சிக்கார ரீஜண்ட் அரசர் மாண்டதை வெளித் தெரியாமல் மறைத்துவிட்டுத் தன் எதேச்சதிகாரத்தை நடத்தி வந்தான்! இந்த சூழ்ச்சியை ட்சாங் யாங்—யொட்ஸோ என்பவன் கண்டறிந்து ரீஜண்டை விரட்டிவிட்டு அவனே அரசைக் கைப்பற்றினான். மதவும், மங்கையுமே என் வாழ்வின் குறிக்கோளெனக் கூறி அவன் ஆட்சி செய்தான். யாரும் சகிக்க முடியாத அளவுக்கு அவனது லீலா விநோதங்கள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வந்தன!

மக்கள் யாரும் விழிப்புற்று, புனிதப்போர்வையில் புல்லன் உலவுகிறானென்ன சந்தேகங் கொண்டுவிட்டால் ஆட்சிபீடம் ஆட்டங்கொடுத்துவிடுமே என மத குருக்கள் மனங்கலங்கினர். ஆகவே, நிலைமை வளர்வதற்குள் அரசனையே தீர்த்துக்கட்ட முடிவு செய்துவிட்டனர். அதன்படி அரசன் கொல்லப்பட்டான்! மாண்ட அரசனின் பீடத்தை லாப்சாங்—கேசாங் யொட்சோ என்பவன் கைப்பற்றிக்கொண்டு ஆட்சியைத் துவக்கினான்!

அரசர்கள் கொலை செய்யப்பட்டு—தொடர்ச்சியாக அந்த நிலை வளர்ந்துவந்ததால் மக்களினத்தில் ஒரு பரபரப்பு நாட்டிலே வேதனைக் குரலை எழுப்பினர். ஆட்சி மாறிவந்ததே தவிர ஆளும் முறை மக்களினத்தை வாழ வைப்பதாக இல்லை. ஏனவே குழப்பம் நாட்டிலே வளர்ந்தது! 1720-ல் அந்த வளர்ந்துவந்த குழப்பம் உச்ச நிலையிலே யிருந்தது. ரீஜெணட் கொல்லப்பட்டான். நிலைமையைக் கண்டு அஞ்சிய சீன அரசாங்கம் போர்ப்படை பொன்றை திபேத்துக்கு அனுப்பியது. திபேத்துக்கும்—சீனத்துக்கும் கடுமையான போர் நடந்து முடிந்தபிறகு...திபேத்தியர் அடக்கப்பட்டனர். ஜாம்பால் யொட்சோ என்பவனை சீனர்கள் தேர்ந்தெடுத்த திபேத்தின் அரசனாக்கினார்கள்!



1876-ம் ஆண்டிலிருந்து... 1940-ம் ஆண்டுவரை திபேத் ஆட்சி பீடத்திலே எவ்வித குழப்பமுமில்லை. ஆட்சியிலே அமர்ந்திருந்த மன்னர்கள் கொலை செய்யப்படவோ; விரட்டியடிக்கப்படவோ இல்லை! மன்னர்கள் அமைதியான முறையிலே மாறிக்கொண்டேயிருந்தனர் ஆனால் மக்களின் நிலையிலே சிறிதளவாவது மாற்றமே இல்லை!

1788-ம் ஆண்டிலே...திபேத் சரித்திரத்திலே திடுக்கிடும் சம்பவமொன்று நடந்து முடிந்தது! திபேத்தின் சூழ்நிலை கெட்டிருப்பதை அறிந்த கூர்க்கர்கள் திபேத்மீது ஆக்ரமிப்பைத் துவங்கினர்! கூர்க்கர்களின் மூர்க்கத் தாக்குதலை சீனப்படை ஓடோடிவந்து எதிர்த்த கூர்க்கர்களை விரட்டி திபேத் ஆட்சியை சீர்படுத்தியது. 1838-ம் ஆண்டு மீண்டும் திபேத் அந்நிய நாடான காஷ்மீரால் தாக்கப்பட்டது. காஷ்மீரிலிருந்த டோக்ராக்கள் (Dogras)... எனப்படுபவர்கள்தான் அந்தத் தாக்குதலை திபேத்மீது துவக்கினர். சீனப்படையின் தீரத்தால் அந்த ஆக்ரமிப்பாளர்களும் விரட்டியடிக்கப் பட்டார்கள். கூர்க்கர்கள் தங்களது இரண்டாவது படையெடுப்பை 1855-ல் திபேத்மீது துவக்கினார்கள். இந்த நேரத்திலே நேபாளத்துக்கும் — திபேத்துக்கும் ஒப்பந்தமேற்பட்டது வியாபாரம் போன்ற துறைகளிலே... எனவே கூர்க்க படையெடுப்பு வாபசானது!

1744-லே — திபேத்மீது பிரிட்டிசாரின் கண் விழுந்தது! எப்படியும் தன் செல்வாக்கை அங்கே நுழைத்துக்கொள்ள ஆங்கிலேயர், படாதபாடு பட்டனர். வாரன் ஹேஸ்டிங்ஸின் சூழ்ச்சித் திட்டத்தால் அப்போதைய கிழக்கிந்தியக் கம்பெனியின் பெயரால்...ஜார்ஜ் போல் என்ற ஆங்கிலேயனை திபேத்துக்கு தூது அனுப்பினார்கள். - ஜார்ஜ்போல் முயற்சியிலே தோல்வி யடையவே; 1783-ல் சாமுவேல் டர்னர் என்ற ஆங்கிலத் தளபதியே திபேத்துக்குள்ளே அடி எடுத்து வைக்க முயற்சித்தார். அப்போதைய திபேத்திலே சீனர்கள் பெருவாரியாக செல்வாக்குப் பெற்று திபேத்தின் மூலைமுடுக்கெல்லாம் அவர்களாகவே உலவினர். இந்த சந்தர்ப்பத்திலே ஆங்கிலேயர் தங்களது சூழ்ச்சித்திட்டத்தை நடத்த முடியாது போனதோடு....அவர்கள் திபேத்தினுள்ளே அடி எடுத்து வைக்கவும் அனுமதிக்கப்படவில்லை!

தூதுகள் — மூலமாகப் பயனில்லை. என்பதைக் கண்ட ஆங்கிலேயர் 1904-ம் ஆண்டு பெரியதோர் போரைத் துவக்கினர் திபேத்மீது! அப்போதைய ஆட்சியைப் பாதுகாத்துவந்த தலைலாமா மங்கோலியாவுக்கு ஓடி ஒளிந்து கொண்டான். போர் ஒரு முடிவுக்கு வந்து... திபேத்தோடு ஒப்பந்தம்...என்ற பெயரால் ஆங்கிலேயன் தனது சூழ்ச்சித் திட்டத்தை விரித்துத் தனது செல்வாக்கை அங்கேயும் நிலைநாட்டினான்!

ஆங்கிலேயர் நிலைத்துவிட்டதைக் கண்ட சீனர்; பெரியதோர் படையை திபேத் அனுப்பிவைத்து ஆங்கில செல்வாக்கை மிகுந்த சிரமத்துக்கிடையே ஓரளவு குறைத்தார்கள்! 1911-லே சீனப் புரட்சி புகையவே... மீண்டும் ஆங்கில ஆதிபத்தியம் தன் செல்வாக்கை விரித்தது. 1920-லே அந்த சூழ்ச்சி வலை மேலும் விரிந்தது, பல இடங்களிலே ஆங்கிலேயர்

(18-ம் பக்கம் பார்க்க)

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

வைத்த கண்களை வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் தோற்றம் பயங்கரமானதாகத் தோன்றவில்லை. அவனுடைய இளம் வயதிக்கேற்ப கட்டமைந்த தேகம்! செம்மேனி! வீரத்தை வெளிப்படுத்தும் வகையில் அவன் கண்களில் ஒளிவீசியது! அவன் அணிந்துகொண்டிருந்த ஆடை ஆபரணங்கள் அந்தத் தீவட்டிகளின் வெளிச்சத்திலே மின்னின! பரிவின்பனும், உதயனும் அவன் பார்வையைப் பிரதிபலித்தார்கள்!

அந்தக் கொள்ளைக் கூட்டத்தினர் தங்கள் தலைவனிடம் அவர்கள் இருவரையும் பற்றி புகார் செய்து கொண்டிருந்தார்கள். இரைச்சல் எழுந்துகொண்டிருந்தது.

"அமைதி!"—அந்தக் கூட்டத்தின் தலைவன் கணீர் என்ற குரலில் பேசினான். அடுத்த கணமே அங்கு அமைதி நிலவியது!

"நீங்கள் யார்? எங்குச் செல்கிறீர்கள்?" என்று கேட்டான் அவன். அந்தப் பேச்சிலே உக்கிரம் தொனிக்கவில்லை! அன்பு தோய்ந்திருந்தது! தான் அடைந்த வியப்பின் பலனாகத்தான் அந்த அன்பு தோன்றியதாகக் காட்டியது அவன் பேச்சு.

"நாங்கள் நெய்தல் நாட்டுக்காரர்கள், பாலை நாட்டிற்குச் செல்கிறோம்!" என்றான் பரிவின்பன் மரியாதையோடு.

"பாலைநாட்டிற்கா? எதற்காக? ...அந்நாட்டின் மன்னனின் மகளின் பிறந்தநாள்விழா கொண்டாட்டத்திற்கா?"

"ஆமாம். அதற்குத்தான். நான் நெய்தல் நாட்டின் தளபதி. இவன் என் மெய்க்காப்பாளன்."

"அப்படியா?......காளிங்கா! நீங்கள் அனைவரும் குகைக்குச் செல்லலாம்!" என்றான் அவன்.

அந்தக் கூட்டத்தைக் குகைக்கு வழி நடத்திச் சென்றான் காளிங்கன்.

"உங்கள் வீரத்தையும், வன்மையையும் கேள்வியுற்றேன்! மிக்க மகிழ்ச்சி! உங்கள் பெயர்?"

"என் பெயர் பரிவின்பன். இவன் பெயர் உதயன்."

"இரும்பு விலங்குகளை நீங்கள் [illegible] வெளியேறினீர்கள்?"

"ஆமாம்"

"உங்கள் சுய பலத்தாலா?

பரிவின்பன் பதில் பேசவில்லை. அந்தக் கொள்ளைக் கூட்டத் தலைவன் இளநகைப்போடு,

"சரி, இன்று இரவு தங்கி நாளை பயணப்படுங்களேன்! எதற்காக இந்த நடுநிசியில் நீங்கள் பிரயாணம் செய்யவேண்டும்?" என்றான்.

"இல்லையில்லை. பரவாயில்லை. நாங்கள் இப்பொழுதே பயணப்படுகிறோம்!" என்றான பரிவின்பன்.

"ஏன், என்னிடம் தங்கிப்போக பயமாயிருக்கிறதா? கொள்ளைக் கூட்டத்தலைவன் எச்சமயும் உங்களை யறியாமல் ஒரு பயமுண்டாகிறதா? என் பேச்சிலே சூழ்ச்சி இருப்பதாகத் தோன்றுகிறதா?" என்று கேட்டான் அவன்.

"இல்லை. உண்மை வீரம் பொதிந்துள்ள உம்மிடம் சூழ்ச்சி இருக்காது என்பது எனக்குத் தெரியும்! அது கையாலாகாதவர்களின் சொந்தச் சொத்து ஆயிற்றே! ...நாட்டில் வீரராகத் திகழக்கூடிய நீர் எதற்காகக் கொள்ளைக் கூட்டம் அமைத்துக்கொண்டு அதன் தலைவராக இருத்தல் வேண்டும்? இத்தகைய தீய கலையை மேற்கொள்வதால் உமக்குப் புகழில்லாமல் இகழ்ச்சிதானே கிடைக்கும்? என் கேள்விகள் உமக்குக் கோபந்தரலாம். என்னையறியாமல் நான் உமது அன்புப் பார்வையின் வயப்பட்டு, உமது நலத்தில் மிகுந்த அக்கறை கொண்டு இந்தக் கேள்வியைக் கேட்கிறேன்!"—பரிவின்பன் தன் உள்ளத்தின் மேல் தளத்தில் மிதக்கிக்கொண்டிருந்த கேள்விகளை அவனிடம் சொரிந்தான்.

"இல்லை நண்பரே! உமது கேள்வி எனக்குக் கோபத்தை மூட்டவில்லை. நீர் கேட்கும் கேள்வி ஞாயமான கேள்வி. நீர் என்னால் வெகுவாகக் கவரப்பட்டுள்ளீர் என்பதும் எனக்கு நன்றாகத் தெரிகிறது. நான் எதற்காகக் கொள்ளைக்கூட்டமொன்றின் தலைவனாய் இருக்கவேண்டும், புகழ் என்னை வந்தடையாதே என்று நீர் வருந்துகிறீர். நான் எதற்காக இந்தக் கலையை மேற்கொண்டுள்ளேன் என்பதையும் மற்றும் பல விஷயங்களையும் உமக்கு விளக்கிச் [illegible] என்னுடன் எங்கள் குகைக்கு வாரும்!...வர

மறுக்கவேண்டாம் பரிவின்பரே உமது கேள்விகளுக்குப் பதிலைத் தெரிந்துகொள்ள வேண்டும் நீர்; எனவே வாரும். உதயா, நீயும் வா!" அந்த இளைஞன் அன்பொழுகப் பேசினான். பரிவின்பனின் கைகளைப் பற்றிக்கொண்டு அன்போடு அழைத்தான். அவர்கள் அவன் அழைப்பைத் தட்டிக் கழித்துவிட முடியவில்லை. அவன் கூறப்போகும் விஷயங்களைக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் அவர்களுக்கு எழுந்தது! எனவே அவன் அழைப்பிற் கிணங்கி அவனுடன் அந்தக் குகையை யடைந்தார்கள்.

மூவரும் குகையினுள் நுழைந்ததும் அக்கொள்ளைக் கூட்டத்தார் அனைவரும் அவர்களுக்கு வழிவிட்டு அங்கு அமைதி நிலவச் செய்தார்கள். அவர்களைத்தனை பேர்முகத்திலும் வியப்பு தோய்ந்திருந்தது!

அவன் அவர்களை ஒரு சிறு அறைக்கு அழைத்துச் சென்றான். மூவரும் அதனுள் நுழைந்ததும், அவன் அந்த அறையின் கதவை யடைத்துவிட்டான். மங்கலான ஒளியைத் தந்துகொண்டிருந்தது, அங்குஎரிந்து கொண்டிருந்ததொரு விளக்கு. சுடுகாட்டு அமைதி நிலவியது!

"பரிவின்பரே! உதயா!...இதோ இந்த ஆசனங்களில் அமருங்கள்! உங்கள் கேள்விக்குப் பதில் சொல்லப்போகிறேன். ஆமாம். உங்களுக்குள்ள சந்தேகத்தை நிவர்த்திக்கப் போகிறேன் நான்! எதோ மீண்டுமொரு முறை அந்தக் கேள்வியைக் கேளுங்கள்!..." என்றான் அவன்.

"நீர், கொண்ட கலையில் நல்ல பயிற்சியும் தேர்ச்சியும் பெற்று, அதைத் தீய வழியில் பயன்படுத்துவது எதற்காக?—வெற்றி வீரனாக விளங்க வேண்டிய நீர் எதற்காக ஒரு கொள்ளைக் கூட்டத்தலைவனாக விளங்குகிறீர்?......என்பது தான்





எங்கள் கேள்வி!" என்றான் பரிவின்பன்.

"வெற்றி வீரன்! அஹ்ஹஹ்ஹஹ்ஹா!......பரிவின்பரே! வெற்றி வீரனாக விளங்க வேண்டியவன் எப்படியிருக்க வேண்டும்?"

"வெற்றி வீரனாக விளங்குகிறவன், வீரத்தோடு அன்பும் கொண்டவனாக, நாட்டு மக்களுக்குத் தீங்கிழைக்காதவனாக, நாட்டிற்குத் தொண்டாற்றுகிறவனாக, நாட்டுமக்களின் நன்மதிப்பைப் பெற்றவனாக, இருக்கவேண்டும்!" என்று கூறினான் பரிவின்பன்.

"சரியான விளக்கம் பரிவின்பரே!" என்று கூறிக்கொண்டே அந்த அறையின் கவரொன்றை நெருங்கினான் அவன். (தொடரும்)

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

முயற்சியால நாகரீகம் திபேத்திலே அரும்புவிட்டது! பின்னர் இரண்டாம் உலக சந்தர்ப்பத்திலே ஆங்கில செல்வாக்கு சிறுகச் சிறுக அகற்றப்பட்டது! அவர்கள் செல்வாக்கு மறையவே சீனர்கள் நல்ல முறையிலே திபேத்தில் வரவேற்கப் பட்டார்கள். இடையே இப்போது சமீப காலத்திலே பெரிய குழப்பம் ஏற்பட்டு ஒரு வழியாக முடித்து வைக்கப்பட்டது சீனத்தலையீட்டால்! இப்போது திபேத்...சிகப்புச் சீனாவோடு நேச ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது. இனிமேலாவது திபேத்தியர் வாழ்வு ஓரளவுக்கு வளம்படுமென யாரும் நம்பமுடியும். காரணம் அதன் கூட்டுத் தோழனின் திறமையால்!

மறுமலர்ச்சிப் பாதையிலே நடைபோடும் புதிய சீனத்தோடு கைகோர்த்துள்ள திபேத் விரைவிலேயே பொன் நாடாகத்தான் காட்சிதரப்போகிறது! இத்தனை நாளாக—கொலையையும்; மாயாவாதம் பேசிடும் மதகுருக்களையுமே கண்டு வந்த திபேத்தியர் இனி புதுமையாளர்களைச் [illegible] சந்தித்து புன்னகை புரியில் உலவத்தான் போகிறார்கள்!

# சிந்தனைக்கு விருந்து

பல வருஷங்களாகப் பருவமழை தவறக் காரணம் மக்கள் செய்த பாவந்தான் என்ற சமாதானம் எடுபடக்கூடிய காலம் இதுவல்ல.

—சுதேசமித்திரன் தலையங்கம்.

சுதேசமித்திரன் இப்படிச்சொல்வது பெரிய பாபமன்றோ? சாஸ்திர சம்பிரதாயங்கள் இனி என்னவது என்பதை மித்திரன் நினைத்துப் பார்க்க வேண்டாமா என்று அக்கிரகாரம் அங்கலாய்க்கிறதாம்.

*　　*　　*

சர்க்கார் பணம் கையாடல், மனதறிந்து பொய்க் கணக்கு வெகு கச்சிதமாக ஜோடனை செய்தல், முதலிய தில்லுமல்லுகள் ஐரோப்பாவிலுள்ள இந்திய தூதுவராலயமொன்றில நடந்திருப்பது ஆடிட்டர் ஜெனரலின் ரிபோர்ட்டிலிருந்து தெரிய வருகிறது.

—பத்திரிகைச் செய்தி.

பணம் கையாடல், பொய்க் கணக்கு, தில்லுமல்லுகள் எப்படி கொள்ளைலாபக்காரர்களால் நடத்தப்படுகின்றன என்பதைக் கண்டறிய தூதுவராலயம் பரீட்சை செய்து பார்த்திருக்கலாம். ஆடிட்டர் ஜெனரல் இதை உணராதது அவரது குறுகிய மனப்பான்மையைக் காட்டுகிறதென தூதுவர் சிட்டுக்குருவி தெரிவிக்கிறது.

*　　*　　*

நம் கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாத கடவுளைப்பற்றியும், இல்லாத மேலுலகத்தைப்பற்றியும் வர்ணிப்பவர்களே நாட்டுத் துரோகிகள்.

—N. S. கிருஷ்ணன்.

கடவுளும் மேனுலகமும் வர்ணனையாம்! ஆண்டவன் சும்மா விடுவாரா? நெருப்புக் கண்ணைத் திறந்துவிடப்போகிறார், ஜாக்கி[illegible] ரதை, அப்புறம் [illegible] கதி!......

நம் நாடு ஏழை நாடு; ஆனால் அதற்குள்ள ஆத்மீக அந்தஸ்து கொஞ்ச மல்ல, ராணுவத்தை விட நம் ஆத்மீக பலத்துக்காக உலகமே நம்மை எதிர்பார்க்கிறது.

—ராஜாஜி

ராஜாஜி போலீஸ் மந்திரியாக இருந்ததாலும், அவர் அங்கம் வகித்த டில்லி சர்க்கார் ஆண்டுதோறும் ரூபா 170 கோடி ராணுவத்துக்காக செலவழிப்பதாலும ராஜாஜிக்கே ஆத்மீக பலத்தில் நம்பிக்கை இல்லை என யாரும் கருதிவிட கூடாது ஆத்மீக சக்தியை நம்பாத அசட்டுப் பேர்வழிகளுக்காகத்தான் அந்த ராணுவம் என்பது நினைவிருக்கட்டும்.

ஆத்மீக பலத்துக்காக உலகம் நம்மை எதிர்பார்ப்பது என்னவோ உண்மைதான். ஆனால் உடல் பலத்துக்காக உணவுக்குக் கையேந்தி நாம் உலகை எதிர்பார்ப்பதும் முழு உண்மை. இதைக் கண்டு உடல் பலம் இன்றி ஆத்மீக பலம் ஏது என விஞ்ஞானம் சிரிக்கிறதாம். விஞ்ஞானத்திற்கு எவ்வளவு திமிர் பாருங்கள். அட்டகாசம் செய்யும் பத்திரிகைகளின் வாலை அறுக்கச் சட்டம் செய்த ராஜாஜி இந்த விஞ்ஞானத்தின் வாலை அறுக்காமலா விடுவார்.

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்நிலையில், அதன் வீழ்ச்சிக்காகப் பிறிதொரு கட்சியை ஆதரிப்பதென்பது தேவையற்ற செயலாகும்.

நம் கொள்கைகளையும் திட்டங்களையும் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், எதிர்ப்பதில்லை என்ற உறுதியாவது ஒரு கட்சி தருமானால் அந்தக் கட்சிக்கு ஆதரவுதருவது பற்றி ஆலோசிக்கவழியுண்டு. நம் ஆதரவு தேவை என்று உண்மையில் கருதும் பிற கட்சித்தலைவர்கள் தங்கள் கட்சியின் சார்பிலே இந்த வாக்[illegible] குறுதியைத் [illegible] னேன்?

# கலைஞன்

தொடர்கதை

வேல - வில்லவன்

அக் கொள்ளைக்காரர்களில் சிலர் பரிவின்பனின் கைகளிலும், உதயனின் கைகளிலும் விலங்குகளை மாட்டி அவர்களை அக் குகையின் உட்புறத்திற்கிழுத்துச் சென்றார்கள். ஒரே இருட்டாக இருந்தது. எதிரே இருந்த ஒரு பெரிய பாரக் கல்லின் ஒரு மூலையிலிருந்த திருகாணி யொன்றைத் திருகினார்கள். அப்பாறை விலகி அவர்களுக்கு வழிவிட்டது. அவர்கள் உள்ளே நுழைந்தார்கள். பரிவின்பனையும் உதயனையும் அந்த இருட்டறையினுள் தள்ளிவிட்டு அந்தப் பாராங் கல்லைத் திருகாணியின் உதவியால் பழையபடி இருக்கச் செய்தார்கள்.

பரிவின்பனும் உதயனும் இருட்டறையில் ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாமல் ஒருவரோடொருவர் மோதிக்கொண்டார்கள்!

"உதயா! பயப்படுகிறாயா?" என்றான் பரிவின்பன்.

"ம்...இல்லை..." என்று நடுக்கத்தோடு இழுத்தான் உதயன்.

"பயப்படாதே உதயா! நாம் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை! நாம் வெகு எளிதாக இங்கிருந்துத் தப்பிச் சென்றுவிடலாம்!"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? நமது கைகளிலே இரும்பு விலங்குகளிலிருக்கும் போது இவ்வளவு பெரிய பாறையைப் புரட்டி நாம் வெளிச் செல்வது எப்படிச் சாத்தியமான காரியமாகும்? எனக்கொன்றும் விளங்கவில்லை!"

"உனக்கு விளங்காது உதயா! என் பேச்சில் உனக்குச் சந்தேகம் கூட ஏற்படும். ஆனால் என் பேச்சு பலித்ததும் நீ வியப்புக் கடலில் மூழ்கிவிட மாட்டாய்! இத்தகைய தண்டனைகள் இனி நம்மை ஏதும செய்ய முடியாதென்பதை நன்றாக விளக்கிக் கொள்வாய்!' என்று கூறி உதயனைத் தைரியத்தோடு இருக்கச் செய்தான் பரிவின்பன்.

இராப்பொழுது மெள்ள நகர்ந்து கொண்டிருந்தது. நடுநிசி நெருங்கிவிட்டது! பரிவின்பனும் உதயனும் அந்த மையிருட்டிலே பட்டினியோடு உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அப்பொழுதும் அக் கொள்ளைக் கூட்டத்தினர் வெளியே கூச்சலிட்டுப் பேசிக்கொண்டிருந்தார்கள். சிறிது நேரம் கழிந்ததும் சில சைகைக்காட்டும் ஒலிகள் எழும்பின! அந்தக் கொள்ளைக்காரர்களத்தனை பேரும் விழுந்தடித்துக் கொண்டு வெளியே ஓடினார்கள்; சிலர் குதிரைகள் மீது சென்றார்கள். இரண்டு பேர் மட்டும் எஞ்சியிருந்து குகையைக் காவல் காத்துக் கொண்டிருக்கலானார்கள்.

உதயன் தூங்கிவிழுந்து கொண்டிருந்தான். பரிவின்பன் அவனை யெழுப்பினான். கொள்ளைக் கூட்டத்தினர் வெளிச் சென்றிருப்பதை எடுத்துச் சொல்லிப் பின் தன்னுடைய வலது தொடையின் மீது வைத்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த விலங்கு முறிந்துவிட்டது! அங்ஙனமே உதயனின் கைகளில் பூட்டப்பட்டிருந்த விலங்குகளையும் ஒடித்தெறிந்தான். உதயனை, மகிழ்ச்சியும், வியப்பும் பற்றிக் கொண்டன! அவனுக்கு விஷயம் விளங்கியது! கிழவன் இன்பதாசன் தங்களுக்குச் செய்த பெரு நன்மையை எண்ணி எண்ணி மகிழ்ந்து அவனுக்கு நன்றி செலுத்தினார்கள் இருவரும். கிழவன் அந்தச் சிறுவேரைப் பரிவின்பனின் வலது தொடையில் பொருத்திக் கட்டுகள் கட்டிய போது அதை ஒரு பிரமாதமான காரியமாக உதயன் எண்ணவில்லை. சாரணமாக மக்கள் தாயத்து மகிமைகளை வியந்து அவைகளைப் பூண்டுகொள்வதைப் போன்றது அது என்று எண்ணினான் அவன். அதைப்பற்றி ஏதும் தெரிந்து கொள்ளக்கூட அவன் விரும்பவில்லை. பிறகு அது மாந்திரீக வயப்பட்டதல்ல உண்மையாகவே சக்திவாய்ந்தது என்பதை அவன் அறிந்த பொழுது மிகுந்த வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தான். இரும்பைத் தகர்த்தெறியக் கூடிய வேர் ஒன்றிருப்பதைத்தமிழ் மக்கள் கண்டறிந்திருந்தது அன்று தான் அவர்களிருவருக்கும் தெரிந்தது! அது தமிழ் மக்கள் எல்லாருக்கும் தெரிந்திருந்த ஒரு விஷயமல்ல. ஏதோ சிலர் கேள்விப்பட்டிருந்தார்கள், ஒரு சக்தி வாய்ந்த வேர் இருப்பதாகவும் அது இரும்பைப் பிளந்து விடுவதாகவும்! ஆனால் அதைப்பற்றி அதிகமாக அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை எவருக்கும் எழவில்லை!.........

"உதயா! விஷயம் விளங்குகிறதா? நாம் வழியில் சந்தித்த ஓவியர் இன்பதாசர் உண்மையிலேயே ஒரு சிறந்த மனிதர்! நாம் அவருக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளோம். இந்த வேரின் மகிமை உனக்குத் தெரியுமா உதயா? இது காட்டிலே கிடைக்கக் கூடியதோர் வேர். இதனை மக்கள் வெட்டியெடுப்பது கிடையாது! இது எந்த மரத்தின், அல்லது செடியின் வேர் என்பது அவர்களுக்குத் தெரிந்தால் தானே! ......இதனைப் பெற முயலுகிறவர்கள் ஒரு விசித்திரமானமுறையைக் கையாளுகிறார்கள். "செம்பூத்து" என்று சொல்லப்படும் கள்ளிக் காகம் தன் கூண்டில் தன் குஞ்சுகளை விட்டுவிட்டு இரை தேடிவரச் செல்லும்போது அவர்கள் இரும்பால் செய்யப்பட்ட சிறு சங்கிலிகளை, அந்தக் கூட்டிலுள்ள குஞ்சுகளின் கால்களில் மாட்டிவிடுவார்கள். அதனை அவைகளின் தாய்ப் பறவையானது தன் அலகினால் உடைத்தெறிய முடியாது. எனவே அது பறந்து சென்று இந்த வேரை



கொண்டு வந்து அந்தச் சங்கிலி வளையங்களை உடைத் தெறிந்து விடும்! பிறகு அவர்கள் சமயம் பார்த்து அந்தக் கூட்டை அப்படியே பெயர்த்தெடுத்துக் கொண்டு போய் அதனை ஓடும் நீரில் மிதக்க விடுவார்கள். அந்தக் கூட்டை உருவாக்கிய குச்சிகள் அனைத்தும் நீர் ஓடும் திசையில் மிதக்கச் செல்லும். இந்த வேர் மட்டும் ஓடும் நீரை எதிர்த்து நிற்கும்! அதிலிருந்து இந்த வேரைக் கண்டறிந்து கொள்ளுவார்கள். பிறகு இதைத் தங்கள் உடலின் ஒரு பகுதியில் பொதிந்து வைத்துக் கொண்டு இரும்புப் பொருட்களை உடைத்து விடுவார்கள்! வியப்பாக இருக்கிறதல்லவா?.........

உதயா! என் தொடையில் இந்த வேர் பொருத்தப்பட்ட பொழுது வெட்டிப் பிளக்கப்பட்ட என சதையை ஒன்று சேர்ப்பதற்காகவும், இன்பதாசரின் காயத்தை ஆறச் செய்வதற்காகவும் நீ சில பச்சிலைகளை அவரிடம் வாங்கிச் சென்று அரைத்து வந்தாயல்லவா? அந்தப் பச்சிலையின் மகத்துவம் உனக்குத் தெரியுமா? அதுவும் விசித்திரமானதுதான். வெட்டிப் பிளக்கப்பட்ட இரு சதைப் பகுதிகளை ஒன்று சேர்க்கும் சக்திவாய்ந்தது! அதை எப்படி முதன் முதலில் கண்டறிந்தார்களென்று கேட்கிறாயா? சொல்கிறேன். ஒரு வேடுவன், காட்டில் வேட்டையாடிவிட்டு வீடுதிரும்புகிற பொழுது, அவன் அம்பெய்திக் கொன்ற முயலொன்றை அறுத்துக் துண்டம் துண்டங்களாக்கினான்; அவைகளை வீட்டிற்கு எடுத்துச் செல்ல அவனிடம் பை ஏதும் இல்லாமலிருந்தது; எனவே அவன் எதிரே தோன்றிய செடியொன்றின் அகன்ற இலைகளைப் பறித்து அவைகளால் அக் கறித் துண்டுகளைச்சுற்றியெடுத்துக் கொண்டு வீடு சென்றான். வீடு சென்றதும் வியப்படைந்து போனான்; அவனை அதிகமாக ஆச்சரியப்படச் செய்கின்ற அளவுக்கு ஒரு பெரிய மாறுதல் அந்தக் கறித் துண்டங்களிடையே உண்டாகியிருந்தது! ஆமாம். அந்தக் கறித் துண்டங்கள் அத்தனையும் ஒன்றாக ஒட்டிக்கொண்டு ஒரே சதைப்பிண்டமாக இருந்தது. துண்டங்கள் ஒன்று சேர்ந்தாற் போல அவை தோன்றவில்லையாம்! துண்டங்களைத் தனியே பெயர்த்தெடுக்க வில்லையாம்! அதிலிருந்து அந்தப் பச்சிலையின் உதவியால் மனித உடம்பின் வெட்டிப் பிளக்கப்பட்ட பாகங்களை ஒன்று சேர்க்கக் கற்றுக் கொண்டானும் அந்தத் தமிழ் மகன்!......கதை நன்றாக இருக்கிறதல்லவா? ......... இம்மாதிரியான உண்மைக் கதைகள் பல இருக்கின்றன உதயா! இன்னும் பலப் பல மூலிகைகள் உள்ளன. இவைகளைப் பற்றியெல்லாம் எனக்குக் கூறியவர் நமது இன்பதாசர்தான்! ......உதயா! மற்றவை யாவையும் வெளியே பேசிக்கொள்ளலாம். இப்பொழுது உடனே நாம் வெளியேற வேண்டும்!" பரிவின்பன் தன் பேச்சை முடித்துவிட்டு அந்தப் பாரங்கல்லின் ஒரு மூலையிலிருந்தத் திருகாணியைத் திருகி அந்தப் பாராங்கல்லை விலகித் தாங்கள் இருவரும் வெளிச்செல்ல வழி விடச் செய்தான். இருவரும் வெளியே வந்தார்கள். குகையைக் காவல் புரிந்து கொண்டிருந்த இரண்டு காவலாளிகளும் தூங்கி விழுந்து கொண்டிருந்தார்கள். ஆனால் சத்தம் கேட்டு எழுந்து கொண்டார்கள். அவர்கள் இருவரையும் நையப்புடைத்து விட்டுப் பரிவின்பனும் விரைவாகக் குகையைவிட்டு வெளியேறித் தங்கள் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு அவைகளை விரட்டினார்கள். குதிரைகள் பறந்தன.

இருவரும் வெகுவேகமாகச் சென்று கொண்டிருந்தார்கள். அவர்கள் மனதிலே மகிழ்ச்சியும் நிம்மதியும் நிலவின. அவர்கள். கண்களை அவர்களால் நம்பமுடியாமற் போய்விட்டது! ஆம். அவர்கள் எதிரே அந்தக் கொள்ளைக் கூட்டம் வந்து கொண்டிருந்தது! அதே ஆட்கள்! நூற்றுக்கணக்கானவர்கள்! அவர்கள் எல்லோருக்கும் முன்பாக ஒரு புது மனிதன் வெள்ளைக் குதிரையொன்றின் மீது சவாரி செய்துகொண்டு வந்துகொண்டிருந்தான். பரிவின்பனுக்கும் உதயனுக்கும் யாது செய்வதென்று தெரியாமற் போய்விட்டது! அந்தக் கொள்ளைக் கூட்டத்தார்களும் மிகுந்த ஆச்சரியமடைந்தார்கள்! இரும்பு விலங்குகளைத் தகர்த்தெறிந்து எங்ஙனம் இவர்கள் வெளிவந்திருக்கக்கூடும் என்ற எண்ணம் அவர்கள் மனதை உலுப்பியது! தங்கள் தலைவனிடம் ஏதோதோ சொன்னார்கள். அவன் அவர்கள் கூறியதைக் கேட்டபடியே தனக்கு எதிரே குதிரைகள் மீது வந்துகொண்டிருந்த இருவரையும் பார்த்துக்கொண்டிருந்தான்.

அவர்கள் இருவரையும் அக் கொள்ளைக் கூட்டம் நெருங்கிவிட்டது! பரிவின்பனும் உதயனும் அவ்வளவாக பயப்படவில்லை! சிறையில் வைத்தால், விலங்கிட்டால் தப்ப வழி அவர்களுக்குத் தெரியும்! ஆனால் சித்திரவதை செய்தால்? கண்களைத்தோண்டி எடுத்துவிட்டால்? தலையைச் சீவ நேர்ந்தால்? ... அவைகளை எண்ணியபொழுது அவர்களுக்குப் பயமாக இல்லாமலிருந்துவிடவில்லை. மீண்டும் அந்த மூர்க்கர்களின் குகையை யடைய வேண்டுமே என்று எண்ணிய பொழுது அவர்களுக்கு மிகவும் வேதனையாயிருந்தது! அக் கொள்ளைக் கூட்டத்தின் துணைத்தலைவனே அதி மூர்க்கனாயுள்ள பொழுது அதன் தலைவன் எத்தகையவனாயிருக்கவேண்டும்?— இந்த எண்ணம் அவர்கள் மனதிலே தோன்றியது. அவன் தோற்றத்தைப் பார்த்த பரிவின்பன், அவனோடு மல்யுத்தம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் வெற்றிபெற முடியுமா என்பதைக் கணிக்க ஆரம்பித்தான்.

அக் கொள்ளைக் கூட்டத்தினர் சிலர் பரிவின்பன் மீதும் உதயன் மீதும் பாய்ந்து அவர்களைப் பிடித்துக்கொண்டார்கள்.

"தப்பிவிட்டதாகக் கனவோ?" என்றான் ஒருவன்.

"நமது தலைவருடன் சண்டை செய்ய நேர்ந்தால் எங்குத் தங்கள் உயிர் தங்கள் உடலைவிட்டுப் பறந்துவிடுமோ என்ற பயம்!" என்றான் மற்றொருவன். கள்வர்கள் சிரித்தார்கள். ஆனால் உள்ளுக்குள்ளே யாவருக்கும் வியப்பாக இருந்தது. பலம் பொருந்திய சங்கிலிகளை எப்படி அவர்கள் உடைத்தெறிந்து விட்டு வந்திருப்பார்கள் என்பது அவர்களுக்கு விளங்கவில்லை!

புதிதாக அக்கூட்டத்தில், வெள்ளைக் குதிரையின்மீது அமர்ந்து கொண்டிருந்த மனிதன் — அக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் —பரிவின்பனையும் உதயனையும்

(12-ம் பக்கம் பார்க்க)

# தி. மு. க. மாநில மாநாடு

டிசம்பர் 13, 14, 15, 16—நான்கு நாட்கள்!

ஆளவந்தார்கள் ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள்! மற்ற கட்சித் தோழர்களோ, ஆர்வத்தோடு காத்திருக்கிறார்கள்! நாட்டாரோ, அந்த நான்கு நாட்களைத் தங்கள் வாழ்வின் திருநாட்கள் என, மகிழ்ச்சியுடன் வரவேற்கிறார்கள்!

நான்கு நாட்கள், திராவிடத்தின் வரலாற்றிலே பொன்னால் பொறிக்கப்படப் போகும் தங்கத் திருநாட்கள்!

நான்கு நாட்கள், நமது தாயக விடுதலைக்கு போர்ப் முரசு கொட்டி போர் மறவர்களை அணிவகுப்பில் நிறுத்திவிடும் அறப்போர் ஆரம்பவிழா நாட்கள்!

நாட்டின் இதயத்தில் இன்ப மழை பொழியப் போகும் நான்கு நாட்கள்!

தேர்தல் உற்சவ மூர்த்திகளுக்கு திக்பிரமை தரும் நான்கு நாட்கள்!

ஓட்டு வேட்டையாடும் திடீர்த் தியாகிகளுக்கும் அவசர தேசாபிமானிகளுக்கும் அச்சந்தரும் நான்கு நாட்கள்!

சென்னை எஸ். ஐ. ஏ. ஏ. மைதானத்தில், அந்த நான்கு நாட்களிலும் திராவிட நாட்டின் விடுதலை விழா தொடர்ந்து நடைபெற இருக்கிறது.

ஒவ்வொரு நாளும், ஒரு உணர்ச்சிப் பெருவிழாவாகத் தான் காட்சியளிக்கப் போகிறது.

கண்ணுள்ளோர் வாழ்விலே மறக்க முடியாத காட்சியாக இருக்கும், அந்த நான்கு நாட்களும்! காதுள்ளோர், தம் ஆயுளில் அடைய முடியாத இன்பத்தைத் தருவதாக உள்ள கருத்துக்கள் நடமிடும், அந்த நான்கு நாட்களிலும்! வாயுள்ளோர் வாழ்த்திடும் வகையில் அமையும், அந்த நான்கு நாட்களின் நடவடிக்கைகளும்!

முதல் நாள், ஓவியக் காட்சி திறப்புவிழா நடைபெறும். அது, கலைத் துறையில், ஒரு புரட்சி அத்தியாயம்! புதியதோர் ஏற்பாடு! தித்தித்திடும் நல்லதொரு திட்டம்! எனப் பாராட்டுரை வழங்குவதாக அமையும்.

அன்றே, எல்லா கிளைக் கழகத் தோழர்களும், வட்ட மாவட்ட, பொதுக்குழு உறுப்பினர்களும், கழகத்தின் சட்ட திட்டம், எதிர்கால வேலைத் திட்டம் இவைகளை எடுத்து ஆராய்வர்.

மற்ற மூன்று தினங்களிலும், மாநாடு நடைபெறும்.

டிசம்பர் 13, 14, 15, 16-நான்கு நாட்கள்-நாம் மறக்க முடியாத நாட்கள்! திராவிடத் தோழர்கள் அந்த சரித்திரப் பிரசித்தி பெறப் போகும் நான்கு நாட்களிலும், உங்கள் பங்கினைச்செலுத்திட திரண்டு வாரீர்! **விளம்பரக்குழு**



Edited Printed and Published by P. C. Manickavachagam alias Kanchi Manimoliyar at Free Printers 147, Coral Merchant St., Madras, Joint-Editor M. Ilancheliyan B. A. (Hons.)

